# திருவெண்காடர்

சென்னை சென்ற் பீட்ஸ் ஹைஸ்கூல்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
சே. சோமசுந்தரம் பிள்ளை
எழுதியது

208




துரைத்தனத்தார் அங்கீகரித்தது

சென்னை :
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1926



[விலை 4 அணா

208

## உள்ளுறை

# முன்னுரை

இக்காலத்தில் பிள்ளைகளும் பெண்களும் தம் தாய் தந்தையரிடம் நடந்துகொள்ள வேண்டிய முறையினை அறியாது வீணே பழிபாவங்களைச் சுமக்கின்றனர். அங்ஙனம் சுமப்பதற்குக் காரணராயிருப்பவரும் தாய்தந்தையரேயாம். தாய் தந்தையர் எவ்வாறு காரணராகின்றன ரெனின், நல்லொழுக்கத்தினையும் நல்லறிவினையும் செவிலித் தாய்போல் வளர்க்கக் கூடிய பெரியோருடைய உண்மைச் சரித்திரங்களைப் போதித்து இளமைப்பருவத்தில் அவர்களை நல்வழிப் படுத்தாமையினால் என்க. அதனால் அவர்கள், தாம் பெறவேண்டிய மரியாதையைப் பெறாதும், சிறுவர் சுமக்கக் கூடாத பழி பாவங்களைச் சுமக்கச் செய்தும், முறையே தம்மையும் தம் மக்களையும் துன்புறுத்துபவ ராகின்றனர்.

இவ்விருவரையும் துன்பினின்றும் காக்க, நல்லொழுக்கத்தினைப் போதிக்கும் நூல்கள் இலேசான வசன நடையில் நமக்கு நூற்றுக் கணக்காகத் தேவை. உள்ள சரித்திரங்களெல்லாம் செய்யுள் ரூபமாகவும் உயர்தர கல்வியுடையார் அறியத்தக்க வசன நடையில் எழுதப்பெற்றனவாகவும் இருக்கின்றன. அவை திருந்தவேண்டிய கீழ்தர கல்வி யுடையாரைத் திருத்துதற்குக் கருவியாக நிலவாமையால், இச்சிறு

புத்தகம்—திருவெண்காடர் சரித்திரம் அக் குறையை யொழிக்க எழுந்த நூல்களுள் ஒன்றாக நிலவுவது. இதனையும் இதுபோன்ற வசன நூல்களையும் சிறுவரும் சிறுமியரும் கிரமமாக வாங்கி வாசிப்பாராயின், அவர்களிடத்து என்றும் இருக்கப்பெறவேண்டிய நல்லொழுக்கம், நல்லறிவு, ஈசுரபக்தி என்னும் மும்மணிகளையும் உடையராகி விளங்குவார் என்பது திண்ணமே. அவர்களை இந்நெறியில் திருத்தினாற்றான் நம் நாடு சீர்ப்பாடெய்தும். அவர்களிடம் இம்மூன்றும் அங்குரிக்கும் வரையில் நம்நாடு முன்னேற்றத்தை யடையாதென்பது நிச்சயமே. அதனால், தம் முன்னேற்றத்தையும் தந் தேயமுன்னேற்றத்தையும் உண்மையாக விரும்பும் ஒவ்வொரு ஆண்மகனும் ஒவ்வொரு பெண் மகளும், இத்தகைய நூல்களை வாங்கித் தத்தம் குழந்தைகளைப் படிப்பித்து, அவர்கள் நன்னெறியில் சிறப்புடன் உலவுவதைக்கண்டு மகிழ்வெய்துவார்களாக.

திருமயிலாப்பூர்
29-11-22.

சே. சோ.





திருவெண்காடர்

# திருவெண்காடர்

## க. திரு அவதாரம்

உலகிலுள்ள எல்லா வளப்பங்களும் நிறையப் பெற்றது சோழநாடு. பலபுலவராலும் புகழப் பெற்றது சோழநாடு. தமிழை ஆதரித்த மன்னரால் ஆளப்பெற்றது சோழநாடு. சோற்றுக்கு என்றுங் குறைவில்லாதது சோழநாடு. அப்படிப்பட்ட சோழ நாட்டிலே காவிரிப்பூம் பட்டினம் என்னும் பெயர் படைத்த பட்டினம் ஒன்று உண்டு. அந்தப் பட்டினத்திலே, சற்றேறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்னே அதாவது பத்தாம் நூற்றாண்டின் முதலிலே பெருஞ்செல்வராகிய வணிகர் ஒருவர் இருந்தார். அவர் பெரிய கப்பல் வியாபாரி. அவர் அநேக ஆயிரம் கப்பல்களைச் சொந்தமாக உடையவர். பல தேசங்களுக்குஞ் சென்று வியாபாரஞ் செய்பவர். "திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்னும் ஔவையார் திருவாக்கைப் படித்து அதன்படி நடந்தவர். அவருக்குச் சிவநேசம் அதிகம். அதனால் அவரைச் சிவநேசர் என்று வழங்கினார்கள்.

சிவநேசமுள்ள சிவநேசர் ஞானகலையம்மையென்பவரை மணந்து இல்லறம் நடத்திவருகையில், ஒரு பெண்குழந்தை பிறந்தது. பிறகு ஆண்குழந்தை வேண்டுமென்று சிலகாலம் பற்பல நோன்புகள்

நோற்று வந்தார்கள். அதன் பிறகு, "தாய்தந்தையர் செய்த புண்ணியமோ! மூதாதையர் செய்த மாதவமோ! இம் மண்ணுலகினர்செய்த அருந்தவமோ சைவர்செய்த பெருந்தவமோ!" என்று வியக்கும்படி தெவிட்டாச் செங்கரும்பு போன்றதோர் ஆண் குழந்தை பிறந்தது.

குழந்தை பிறந்ததும், பெருஞ் செல்வராகிய சிவநேசச்செல்வர், எம்பெருமானின் அடியார் தெவிட்டும்படி பொன்னையும் மணியையும் வாரிவாரிக் கொடுத்தனர். தேவாலயங்களில் திருவிழா நடத்தினர். இப்படிப் புத்திரோற்சவம் கொண்டாடியதும் அக்குழந்தைக்குத் "திருவெண்காடர்" என்று நாமகரணஞ் செய்தனர்.

---

## உ. கனவில் அனுக்கிரகம் பேறல்

திருவெண்காடர் சைவத்தினை வளர்க்க வளர்பவர்போல அழகுடன் வளர்ந்து வந்தனர்; ஐந்து வயதையும் அடைந்தனர். திருவெண்காடருக்கு வயது ஐந்தானதும் சிவநேசர் சிவபதப் பேற்றை யடைந்தனர். அடைந்ததும், திருவெண்காடர் தமது தாயார் உதவியைக்கொண்டு செய்யவேண்டிய நீர்க்கடன் முதலியவற்றை விதிப்படி செய்து முடித்தனர்.

அதன்பின், தாயார் கட்டளையின்படி, ஓராசிரியரிடம் பலநூல்களைக் கற்றனர்; சிவஞானச் செல்வத்தை அளிக்கும் சாஸ்திரங்களை ஓதி யுணர்ந்தனர்.

ஞானசிரியர் உதவியைக் கொண்டு சாஸ்திர நுட்பங்களை அறியவேண்டும் என்னும் அவா அதிக

மாக இருந்தது. அவருக்கு ஞானப்பசி அதிக மென்றும் குருமோகம் மிகவதிகமென்றுங் கூறலாம். அவர் மனம், மேலான பொருளை அறிவதில் பதிந்திருந்தபடியினாலே அவர் உண்ணுவதையும் உறங்குவதையும் மறந்திருந்தார். தேகவளர்ச்சிக்கு ஆதாரமான இவ்விருகாரியத்தையும் கைவிட்டதனால் அவர் சரீரம் வாடத்தலைப்பட்டது. அதனைக்கண்ட தாயார், "ஐயனே, உண்ண எழுந்திரு," என்று ஒருதினம் வற்புறுத்தினர். "அம்மா, இன்று எனக்குப் பசியில்லை; நாளை தவறாமல் உண்பேன்: நீர் வருந்தாதிரும்" என்று சொல்லிப் பசியோடு படுத்துறங்கினர்.

நமது திருவெண்காடரைத் தடுத்தாளத் திருவுளங்கொண்டார் எம்பெருமான். அதனால், அவர் ஒரு கிழவேதியரைப்போல் வந்து, அருகில் உட்கார்ந்து, "அப்பா திருவெண்காடா, உன்மேனி இளைத்து விட்டதே," என்று சொல்லி வருடினர். வருடலும், திருவெண்காடர் துணுக்குற்று எழுவது போல் எழுந்து அருகிலிருப்பவரைக் கண்டு வணங்கி, "எம்பெருமானே, எவ்விடத்திலிருந்து இந்நேரத்தில் எழுந்தருளினீர்கள்? என்னவேண்டும்? எவ்வளவு பணம் வேண்டும்?" என்றனர். அப்பொழுது திருவெண்காடரைநோக்கி, "இந்தச் செல்வம் எனக்கு வேண்டியதில்லை. இதனால் எனக்கு ஆகுங்காரியம் ஒன்றுமேகிடையாது. இந்தச் செல்வம் அழியக்கூடிய செல்வம். இதனை விரும்புகிறவர்கள் உடையின்மீது ஆசைவைத்திருப்போரும் உணவின்மீது எண்ணம் வைத்திருப்போருமே. கடவுளுடைய திருவடியில் மனத்தினை வைத்திருப்போர் இதனை மதிக்கவே

மாட்டார்கள். அவர்கள் சிவஞானச் செல்வத்தையே செல்வமாக மதிப்பார்கள். ஆயினும் நீ இதனை வைத்துக்கொண்டு சிவபூசையையும் அடியார் பூசையையும் ஒழுங்காகச் செய்துவா. அப்படிச் செய்து வருவாயாயின் உனக்கு வேண்டியவற்றையெல்லாம் எம்பெருமான் குறைவின்றிக் கொடுப்பார்," எனக் கூறினர்.

அது கேட்ட திருவெண்காடர், "ஐயனே, தாம் கூறும் பூசையை எப்படி நடத்துவது? நடத்தவேண்டிய கிரமத்தினை எனக்குப் போதிக்க வேண்டும்," என்று வேண்டினர்.

வேண்டவும், எம்பெருமான், "நாளை திருவோணத்தோடு கூடிய சோமவாரத்தில், நீ திருவெண்காட்டை யடைந்து அங்குக் கோயில்கொண்டிருக்கும் சிவபெருமானுக்குப் பூசைகள்செய்து அவர் சந்நிதியில் காத்திருப்பையாயின், வேதியர் ஒருவர் வந்து, சிவலிங்கம் ஒன்று கொடுத்து, பூசை செய்ய வேண்டிய கிரமத்தினை உபதேசிப்பார். பிறகு நீ நித்திய செல்வத்தை எளிதில் அடைவாய்," என்று சொல்லித் திருநீறு கொடுத்து மறைந்தருளினர்.

---

## ௩. குரு தரிசனம்

சிவபெருமான் கனவின்கண் அருளவும், திருவெண்காடர் விழித்தெழுந்து, "எம்பெருமானே, உன் திருவருள் கனவின் அளவினதுதானோ!" என்று சொல்லி வருந்துகையில், திருவெண்காடரின் தாயார் விழித்தெழுந்து, புதல்வரை நோக்கி, "ஐயனே, என்ன

செய்கிறாய்? உனக்கு அடுத்தது யாது?" என்று கேட்டார். கேட்கவும், திருவெண்காடர், தாம் கண்ட கனவினைக் குறிப்பாக அறிவித்தனர். அறிவிக்கவும், அம்மையார் பெருமகிழ்ச்சி யடைந்து, திருவெண் காடரைத் தடவிக்கொடுத்து, "எம்பெருமான் அருள் புரியுங்காலம் நெருங்கியது; சிவபெருமான் நல்லருள் புரிவார். ஆயினும், இந்த இளமைப் பருவத்தில் சிவ பூசையைத் தொடங்காதே; குமாரப்பருவம் வந்த தும் தொடங்கு. இப்பொழுது தொடங்கினால் உன் மேனி தாங்காது," என்று கூறினர்.

அப்பொழுது திருவெண்காடர், "என்னுடைய நாளை வீணாகக் கழிக்க எனக்கு இஷ்டமில்லை. ஒவ் வொரு நிமிஷத்தையும் சுவாமியின் பொருட்டே கழிக்க வேண்டுமென்பது என் விருப்பு. ஆதலால் தடுக்காது உத்தரவு கொடுக்கவேண்டும்," என்று பிரார்த்தித்தார்.

பிரார்த்திக்கவும், தாயார், பிள்ளைக்குச் சிவபூசை செய்வதில் இருக்கும் பெரும் பற்றைப்பார்த்து வியப் படைந்து, அவர் இஷ்டப்படியே நடத்த உத்தரவு கொடுத்தார்.

பிறகு, திருவெண்காடர் தாயாருடன் திருவெண் காட்டிற்குச் சென்று, சுவாமியைத் தரிசித்துக் குரு வரவை எதிர்நோக்கினவராய் அவ்விடத்தில் காத் திருந்தார்.

அப்போது அங்கே பிரமசாரியொருவர் வந்து, "திருவெண்காடர் எங்கே? திருவெண்காடர் எங்கே?" என்று கேட்டுக்கொண்டே ஆலயத்தின்

உட்சென்று, அங்குத் தாயாருடன் இருக்கும் திரு வெண்காடரை முகக்குறிப்பால் அறிந்துகொண்டு, அவரருகிற்சென்று, "அப்பா திருவெண்காடா, உன் கருத்து நிறைவேறும் காலம் நெருங்கியது. அதனால் உன்னைப் பார்க்க இங்கு வந்தோம்," எனக் கூறி நின்றார்.

---

## ௪. உபதேசமும் சிவபூசையும்

திருவெண்காடர், தம்மை ஆட்கொள்ள வந்த குருசிகாமணி இவரே எனத் தெளிந்துகொண்டு, "சுவாமி, என்னைத் தேவரீர் புனிதனாக்க வேண்டும். யான் செய்துள்ள பாவங்களெல்லாந் தொலைய வழி சொல்லவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

அவர் பிரார்த்தனையைக் கேட்ட குரு, "அப்பா, நேற்றிரவில் கிழப்பிராமணர் ஒருவர் என் கனவில் வந்து, 'நாளைய உதயத்தில் திருவெண்காடன் என்னுஞ் சிறுவனொருவன் திருவெண்காட்டில் காத்திருப்பான். அவனிடஞ் சென்று, ஒருவராலும் திறக்க வியலாத இந்தச் சம்புடத்தைக்கொடுத்து, அவனுக்குச் சிவதீக்ஷை செய்து உபதேசமுஞ் செய். பிறகு, இந்தச் சம்புடம் அவனால் திறக்கப்படும். அதில் சிவ லிங்கமூர்த்தியும் விநாயக மூர்த்தியும் இருக்கின்றன. அந்த மூர்த்திகளை நாற்பது நாள் வரையில் விடாமல் பூசனை செய்யச்சொல். நீயும் அவனுடனிருந்து பூசை யை நடத்து,' என்று சொல்லி இந்தச் சம்புடத்தைக் கொடுத்து மறைந்தார். அவர் உத்தரவின்படி இந்தச் சம்புடத்தைக் கொண்டுவந்திருக்கிறேன். இதனை

இங்கு வந்திருப்பவர் திறந்து பார்க்கட்டும். பிறகு, நீ கிரமப்படி வாங்கிப் பூசைசெய்,'' என்று சொல்லி அச் சம்புடத்தை அங்கு வந்திருந்தவர்களிடம் கொடுத்துத் திறக்கச் சொன்னார். அது எவராலும் திறக்கமுடியாத தெய்வத்தன்மை பொருந்தியதாக இருந்தது.

அதன்பின் குரு, வெண்காடரைச் சுவாமியின் சந்நிதிக்கு அழைத்துச் சென்று, கனவில்வந்தவர் இட்ட கட்டளைப்படி உபதேசிக்க வேண்டிய மந்திரத்தை உபதேசித்து, சம்புடத்தைத் திறக்கும்படி கூறினார். திருவெண்காடர் அதனை வாங்கித் திறந்தார். அச் சம்புடத்திற்குள் பிரகாசமுள்ள சிவலிங்கமூர்த்தியொன்றும் விநாயக மூர்த்தியொன்றும் இருந்தன. அவற்றைக் கண்டோர் திருவெண்காடரைப் புகழ்ந்து கொண்டாடினர்.

சற்குரு மூர்த்தி, "நற்றினமாகிய இன்று முதல் பூசிக்கக்கடவாய்'' என்று திருவெண்காடரை நோக்கிக் கூறினர். அவரும் சிவபூசை செய்யத் தொடங்கினார்.

---

## ரு. பொன் பெறுதல்

தம் ஆசிரியருக்கும் அடியார்க்கும் தக்ஷிணை கொடுக்க எண்ணித் தம் தாயாரை யடைந்து பொருள் வேண்டியிருத்தலைத் தெரிவித்தார். அவர் தம் இல்லாமையைச் சொல்லி மனம்வருந்த, இவரும் உளைந்த மனத்துடன் தம் வறுமைக்கு இரங்கி, தங் கடவுளுக்கு இதனை விண்ணப்பித்து, சிவத்தியானத்தோடு உறங்கிக் கிடந்தனர். இவர் தாயாரும் அருகே கவலையோடு

நித்திரைசெய்தனர். அப்போது சிவபெருமான் திருவெண்காடர் கனவில் ஒரு விருத்த வேதியர்போல் வந்து, "அப்பா திருவெண்காடா, நீ வருந்துதலை ஒழி. உனக்கு வேண்டிய பொன் பொருள் முதலிய யாவும் உன் மனையில் வந்து அடைந்திருக்கின்றன. அவற்றையெடுத்து உன் ஆசிரியர்க்கும் அடியார்க்கும் கொடுத்து மகிழ்," என்று சொல்லி மறைந்தார். சிவபெருமான் மறைந்ததும் கனவுகண்டவர் விழித்தெழுந்து உட்கார்ந்தார். இதனை அவர் தாயார் கண்டு, "என்ன கவலையுற்றாய்?" என்று கேட்க, அவர்க்குத் தம் கனவை யுரைத்தார்.

இது இங்கு நிகழ்ந்துகொண் டிருக்கையில், காவிரிப்பூம் பட்டினத்தில் இவர்கள் மனையிற் காவல் பூண்டிருந்த சிலர் ஓடிவந்து, "பூட்டிட்டிருக்கும் தங்கள் மனையுள்ளே நள்ளிரவில் ஒரு பெருஞ் சோதி உண்டாயிற்று. அவ்வொளி இன்னும் மாறவில்லை. அதனைப்பார்க்க எங்கள் கண்கள் கூசுகின்றன," என்று விண்ணப்பித்துக் கொண்டனர்.

இவ் வார்த்தைகளைக் கேட்டதும், திருவெண்காடரும் அவர் தாயாரும் புறப்பட்டுச்சென்று மனையிற் புகுந்து பார்க்க, வீடெல்லாம் பொற்குவையும் மணிக்குவையும் நித்திலக் குவையுமாக இருந்தது. அவற்றைக் கண்டதும், "இக்காரியம் எம்பெருமான்செய்த காரியம். இப்பொருளெல்லாம் எம்பெருமானுடைய பொருள்," என்று சொல்லி எம்பெருமானைத் துதித்துத் தக்ஷிணைக்கும் சிவ பூசைக்கும் வேண்டிய பொருளை எடுத்துக்கொண்டு திருவெண்காட்டிற்கு வந்து ஆசிரியர்க்கும் அடியார்க்கும் கொடுத்து அவர்

களை மகிழ்வித்தனர். ஆசிரியர் தக்ஷிணையைப் பெற்றுக்கொண்டு திருவெண்காடருடன் நாற்பதுநாளிருந்து சிவபூசையை முடித்துக் கொடுத்துப் பிறகு தம் இச்சைவழி போயினர்.

---

## சா. திருமணம்

திருவெண்காடர் சிவலிங்கபூசையும் சிவனடியார் பூசையும் செய்துகொண்டு காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்திருக்கு நாளில் இவர் திருமணத்திற்குரிய பருவத்தினை யடைந்தனர். அதனைக்கண்டு அவர் தாயார், அவ்வூரிலிருந்த சிதம்பரச் செட்டியார் என்பவர் மகளாகிய சிவகலை என்னும் பெண்ணைப் பேசிப் பெருஞ் சிறப்பாகத் திருமணம் முடித்து வைத்தார்.

பிறகு, திருவெண்காடர் சிவகலையம்மையோடு கூடி இல்லற நடத்தி வருகையில், இவர்க்கு வயது முப்பத்தைந்தாகியும் மக்கட்பேறு உண்டாகவில்லை. அதனால் அவர் மனம் வருந்திக் குறையைத் தம்மை ஆளுடைய திருவிடைமருதூருடையார்க்கு விண்ணப்பித்து, வழக்கம்போலவே தானதருமங்களைச் செய்து வந்தார்.

---

## எ. சிவசருமரிடம் சிவபெருமான் வருதல்

அக்காலத்தில், திருவிடைமருதூரில் சிவபக்தி அடியார்பக்தி என்னும் இரண்டிலும் சிறந்த சிவப்பிராமணரொருவர் இருந்தார். அவர் பெயர் சிவசருமர். அவர்தம் மனைவியாகிய சுசீலை என்பவரோடு இல்லற நடத்தி, காலங்கள்தோறும் மகாலிங்க

நாதரை அருச்சித்து வந்தனர். அவர் தமது செல்வத்தையெல்லாம் சிவபூசைக்கும் அடியார் பூசைக்கும் செலவிட்டு வந்தார். சிவபெருமான் திருவருளால் சிறிதுநாளில் அவர் செல்வமெல்லாம் கரைந்து போயிற்று. ஆயினும் அவர் தாம் செய்துவந்த கிரமத்தில் தவறினரல்லர்.

ஒருநாள் சிவபூசைக்குத் திரவியமின்றி அவர் வருந்தியபொழுது, அவர் மனைவியார், "குழந்தைகளுக்காக எடுத்துவைத்த பண்டங்கள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு இன்றைய பூசையை நிறைவேற்றலாம்" என்று கூறினர். அதுகேட்டு, அவரும் மகிழ்ச்சி யடைந்து, அப்பண்டங்களை எடுத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்று சிவபூசையை நிறைவேற்றிவிட்டு மனைக்குத் திரும்புகையில், திருவிடைமருதூருடையார் மிகப்பசித்த விருத்த வேதியரைப் போல் வந்து, சிவசருமரை நோக்கி, "நீர் பசி தீர்ப்பீரோ?" என்று கேட்டனர். கேட்கவும் சிவசருமர், "மனைக்குவாரும் ஐயா. மனைக்கு வந்தால் உமக்கு வேண்டியவற்றைத் தருகிறேன்," என்று கூறினர். அவ்வார்த்தைகளைக் கேட்ட வேதியர், "மனைசேருமளவும் பசி நோய் பொறுக்க வல்லனல்லன்," எனப் பகர்ந்தார். அது கேட்டுச் சிவசருமர் அவ்விடத்திலேயே உண்டி பரிமாறினர். விருத்தவேதியர் சிவசருமர் படைத்ததை யுண்டு மறைந்தார். மறையவும் சிவசருமர் சிவபெருமானே என்றுணர்ந்து மகிழ்ந்திருந்தார்.

அப்பொழுது, அடியார் பசித்திருக்கின்றனரென்று வீட்டிலிருந்து செய்திவந்தது. உடனே

வீட்டிற்குச்சென்று நடந்த வரலாற்றைத் தம்மனைவி யார்க்கு உரைத்தார். அவ்வம்மையார், "இது நம் பெருமான் நம்மீது கருணைகொண்டு செய்த திருவிளை யாடல்," என்று சொல்லித் தம் கழுத்திலிருந்து பொன்னுருவொன்றைக் கழற்றிக் கொடுத்து, அதனை விற்று உண்டிக்காகும் உபகரணங்கள் வாங்கி வரும் படி கூறினர். சிவசருமரும் அப்படியே செய்தனர்; அம்மையார் விரைவிற் சமைத்து அடியார்க்குப் படைத்து அவர்கள் பசியை யாற்றினர்.

---

## அ. சிவபெருமான் சிவசருமர்போல் வருதல்

மறுநாள் காலையில் சுசீலையார் தம் கணவரை நோக்கி, "நம் குறைபாடுகளை யெல்லாம் அடியார் இடுக்கண் தரியாதவரும், வேண்டுவார் வேண்டிற்று ஈயும் விண்ணவரும், நம்மையாண்டவருமாகிய மகா லிங்க நாதரிடம் தாம் உரைக்கலாகாதோ? தாம் உரைத்தாலன்றோ அவர் அவைகளைப் போக்குவார். தாம் சும்மாவிருப்பதில் என்ன பலன்?" என்று கூறினர். சிவ சருமர், "உரைக்கலாம். ஆயினும் வெறுங்கையோடு எப்படி ஆலயத்திற்குச் செல்வது?" என்றனர். என்னவும் அம்மையார், "இன்றைப் பூசைக்கு வேண்டுவன உண்டு," என்றார். சிவசருமர் மகிழ்ந்து, அவற்றைக்கொண்டு ஆலயத்துக்குச் சென்று பூசித்து, நிவேதனமான அன்னம் முதலிய வற்றை வீட்டிற்கு எடுத்துச் செல்லும்படி பரிசாரகர்க ளிடம் கூறிவிட்டுத் தாம் ஒரு புறத்தில் தியானத் திருந்தனர்.

பரிசாரகர்கள் அப்பிரசாதங்களை மடைப்பள்ளியில் வைத்துவிட்டுத் தம் உச்சிக்கடனைக் கழிப்பதற்காகக் குளக்கரைக்குச் சென்றிருந்தனர். அச்சமயத்தில் எல்லோர்க்கும் அமுதளிக்கும் எம்பெருமான்-தித்திக்குஞ் சிவபெருமான் முன்போல விருத்த வேதியர் வடிவு கொண்டு சிவசருமர் முன்வந்து நிற்க, அவர் எழுந்து சென்று மடைப்பள்ளியி லிருந்த அமுதினைக்கொண்டுவந்து படைத்தனர். வேதியர் அவ்வமுதினையுண்டு, பின்னும் பெரும் பசியுடையார்போ லிருந்தனர். அது கண்டு சிவசருமர், அங்கிருந்த அமுதனைத்தையும் பரிமாறினர். வேதியர் பெருமான் "இவ்வமுது மிகவும் சுவையுடைத்து; மிகவும் சுவையுடைத்து," என்று சொல்லிக்கொண்டே பரிமாறப் பட்டவற்றை யெல்லாம் உண்டு பசி தீர்ந்தார்.

அந்தச் சமயத்தில், நமது சிவசருமர் தமது குறையை யொழிக்க வழி ஏதேனும் உண்டோ என்று ஆராய அவராருகிற் சென்றனர். அவர் கருத்தினையறிந்த அந்தக் கருணைமூர்த்தி, "உமது வீட்டில் அடியார் காத்திருப்பர். விரைவிற்போய் அவர்களை உபசரியும்," என்று சொல்லி மறைந்தனர். சிவசருமர் சிவபெருமான் இப்படிக் கணப்போதில் மறைந்ததற்காகப் பெரிதும் கவலைப்பட்டு, பிறகு அவர் கட்டளைப்படி வீட்டிற்குச் செல்லப் புறப்பட்டார்.

அவ்வேளையில் பரிசாரகர்கள் வந்து, தாம் வைத்துப்போன பொருள்கள் இல்லாதிருப்பதைப் பற்றிச் சிவசருமரிடம் வாய்குழறக் கூறினர். அவரும், ஒன்றும் அறியார்போல, "யாம் அதற்கு என்செய்வது?" என்று கூறிவிட்டு, அவர்களுடன் வீட்டிற்கு நடந்தார்

நடக்கையில், "அடியார் பசிக்கு என்செய்வது" என்னும் வருத்தம் அவரை வருத்தியபடியால், விரைவாக நடவாது மெதுவாக நடந்தனர்.

சிவசருமர் படைத்த அன்னத்தையுண்ட சிவபெருமான், "சிவநேசருக்கும், அவர் மனைவியாருக்கும், அவர் மக்களுக்கும், நாள்தோறும் அவர் வீட்டில் அமுது செய்யும் அடியார்களுக்கும் அமுது இல்லையே! சிவசருமர் என்செய்வார்! மனைவிமக்கள் என்செய்வார்கள்! அடியார்கள் யாது புரிவர்! எல்லோரும் பசித்திருப்பார்களே! இவர்கள் பசியுடன் வருந்துதலையோ யாம் பார்ப்பது!" என்று சொல்லித் தம் கணநாதரிற் சிலர் பரிசாரகர் வடிவுபூணச்செய்து தாம் சிவசருமராகவும் திருவுருவந் தரித்து, வழக்கம் போல நிவேதனப் பிரசாதங்களை எடுப்பித்துக் கொண்டுபோய், சிவசருமர் மனைவியை நோக்கி "அடியார்கள் அமுது செய்தற்கு இடம் பண்ணு, இதோ வருகிறேன்," என்று சொல்லிக் கொடுத்து விட்டு வெளியேபோய் மறைந்தனர். அவ்வம்மையார் அவர் கட்டளைப்படி இடம்பண்ணித் தம் கணவர் வருகையை எதிர்நோக்கி யிருந்தனர்.

சிவசருமர் வந்ததும், "இதோ வருகிறேன் என்று எங்குச் சென்றீர்கள்?" எனச் சுசீலையார் கேட்டனர். சிவசருமர் வியப்படைந்து, உட்சென்று, தாம் முன் மடைப்பள்ளியிலிருந்து எடுத்து வேதியர்க்குப் படைத்த பதார்த்தங்களினும் எண்மடங்கு அதிகமான பதார்த்தங்கள் வகைவகையாக இருக்கக்கண்டு, "இஃது எம்மை ஆளுடையார் திருவருள்" என்று சொல்லி அவர் திருவருளைவியந்து, தம் மனைவியார்க்

குச் சங்கதி யாவுங் கூறினர். இருவருமாக அடியார்களைப்பூசித்துப் பின் தம் சுற்றத்துடன் உண்டு மகிழ்ந்திருந்தனர். சுசீலையார் மாத்திரம், "இங்ஙனம் அருள் செய்யும் எம்பெருமான் சிறிது பொருள் அளிக்கலாகாதோ" என்று வருந்தினர்.

---

## கூ. தெய்வக் குழந்தை

அன்றிரவு, சிவபெருமான் இருவர் கனவினிடத்தும் விருத்தவேதியராய் எழுந்தருளி, "கோயிலுக்கு அருகிலுள்ள காருண்யாமிர்த தீர்த்தக்கரையின் கீழ்ப்பாலுள்ள வில்வமரத்தடியில், நாளைய உதயத்தில், தெய்வக்குழந்தையொன்று படுத்திருக்கும்; அக்குழந்தையை எடுத்துக்கொண்டுபோய்க் காவிரிப்பூம் பட்டினத்தில் மகப்பேற்றிற்காக அருந்தவம் பலசெய்யும் திருவெண்காடனிடம் கொடுப்பீராயின் அவன் அம்மகவின் நிறைக்கு ஏற்ற பொன் அளிப்பன்: அதனைக் கொண்டு உங்கள் வறுமையை யொழித்துச் சுகப்படுங்கள்" என்று கூறினர்.

சிவசருமர் அவ்வார்த்தைகளைக் கேட்டுத் துணுக்குற்று எழுந்து, "தெய்வக் குழவியைக் கொடுத்தோ எம் வறுமையைப் போக்குவது! இது யார் செய்யுங் காரியம்!" என்று சொல்லிக்கொண்டிருக்கையில், சிவபெருமான், "யாம் கூறியபடி செய்யும். அம் மகவு திருவெண்காடனுக்கு உபதேசிப்பதற்காகவே அனுப்பப்பட்டதொரு மகவு. அது உங்களுடைய வறுமையையும் திருவெண்காடன் அறியாமையையும் போக்கவல்லது," என்று ஆகாயவாணியார் கூறினர்.

உடனே சிவசருமர் படுக்கையை விட்டு நீங்கித் திருநீறணிந்து சிவத்தியானஞ் செய்தனர். அதற்கு முன்பே, அவர்விழிப்பை எதிர்பார்த்திருந்த சுசீலை யார் தாம்கண்ட கனவை அவரோடுரைக்க, அவரும் தாம்கண்ட கனவைச் சொல்லி இருவரும் அச்சமும் துயரமும் உடையவராய் முன்பின் தோன்றாமல் கவலைப்பட்டுக்கொண் டிருந்தனர். சுசீலையார் தம் கணவரை நோக்கி, "இவ்வறுமையாலன்றோ யாம் சிவ பெருமானிடத்தில் விண்ணப்பஞ்செய்தலும் அதனைத் தீர்க்க 'அவர் இவ்வாறு கட்டளையிடுதலும் நேரிட்டன," என்று சொல்லி இரங்கினார். சிவசருமர் இரங்கி நிற்கும் தம் மனைவியைப் பார்த்து, "நீ சொல்வது உண்மையே யாயினும், நாம் இப்போது சிவபெருமான் கட்டளையைத் தடுக்கலாகாது. ஆகையால், நீ இவ்விடத்தில்தானே இரு, நான் போய் வருகிறேன்," என்று மொழிந்தார். தனியேயிருக்க உடன்படாது அம்மையாரும் உடனே போகவேண்டுமென்று வேண்டினார். வேண்டவும் சிவசருமர், அவரையும் அழைத்துக் கொண்டு ஆலயத்திற் புகுந்து, வழக்கப்படி மருதவாணரைத் தொழுது கொண்டு காருண்யாமிர்த தீர்த்தத்தின் கீழ்க்கரைக்கு வந்தார்கள். அவ்விடத்தில் குழந்தையின் அழுகுரல் கேட்டது. கேட்கவும் அக்குரல்வழியே போய், அவ்விடத்துள்ள ஒரு வில்வ மரத்தின் அடியில் மலரணைமேல் தெய்வக்குழந்தை வீற்றிருக்கக் கண்டனர்.

கண்ட அளவில் இருவரும் தம்மை மறந்தனர். பின்பு தெளிவுவர, சிவசருமர் குழந்தையை ஆவலோடு மார்போடு அணைத்து, "இது அழகின் பயனோ! அறிவின் உருவோ! அருளின் வடிவோ!" என்று பல

வாறு கொஞ்சி, தம் மனைவிகையிற் கொடுத்தனர். அவர் அம் மகவை வாங்கியதும், "பிள்ளைக்கலி தீர்க்க வந்த பெருமானே! என் துன்பினைத் துடைக்கவந்த குருமணியே! என் தூமணியே! என் கண்மணியே! விண்ணோர் நன்மணியே! சிந்தாமணியே!" என்று சொல்லிக் கன்னத்தி லொரு முத்தம் இட்டனர்; கழுத்தி லொரு முத்தமிட்டனர்; கண்ணி லொரு முத்தமிட்டனர்; உச்சியி லொரு முத்தமிட்டனர். இப்படி அவரிட்ட முத்தத்தினை எண்ணவே முடியாது; பார்த்துப் பார்த்து வெகுநேரம் வரையில் முத்தம் இட்டுக் கொண் டிருந்தனர். இவர்கள் ஆசைக்குப் பின்பு முத்தி கொடுக்கலாமென்று கருதி அவ் வருட்குழவியும் அவர்கள் கொடுத்த முத்தங்களையெல்லாம் சும்மா வாங்கிக்கொண்டே யிருந்தது. சுசீலையார் தம் கணவரைநோக்கி, "இந்தக் குழந்தை என் மனத்தினை முற்றும் கொள்ளைகொண்டுவிட்டது. இதனை ஒருவர்க்கும் கொடுக்கச் சம்மதியேன். வறுமையை வேறு வகையால் தீர்த்துக்கொள்ளலாம். இம் மகவைக் கொடுத்துப் பொருள்பெற என் மனம் ஒரு சிறிதும் உடன்படவில்லை" என்று கூறிக் குழவியை எடுத்துக் கொண்டு தம் வீட்டிற்கு நடந்தனர். அப்படி நடந்தவர் எம்பெருமான் திருவருளால் வழிதப்பித் திருவிடைமருதூருக்கு இருகாதத்திலுள்ள காவிரிப்பூம் பட்டினஞ் சென்று அங்குள்ள சோலையொன்றிற் றங்கினர்.

---

## ய. அருட்குழவி பேறுதல்

இவ்விருவரும் அங்கு வந்து சேருமுன்னர், மருதூருடையார் திருவெண்காடர் கனவிற் சென்று,

"நாளைய காலையில் நம் அன்பராகிய சிவசருமர் என்னும் வேதியர், அழகுமிக்க குழந்தை யொன்றை எடுத்துக்கொண்டு வந்து உமது மனைக்கடுத்த சோலையிற் றங்கியிருப்பார். அவரிடஞ் சென்று குழந்தையைப் பெற்றுக்கொண்டு அதன் நிறையளவு பொன்னை அவருக்குக் கொடுத்து அவரை உபசரித்து அனுப்பும். அக் குழந்தை உமது குறையை நீக்கவந்த குழந்தை. அதற்கு நாமகரணம் முதலிய சடங்குகளை யெல்லாம் உமது குலாசாரப்படி நடத்திக்கொள்ளும். அக் குழந்தையால் உமக்கு இருவகை இன்பமும் உண்டாகும்," என்று சொல்லி மறைந்தருளினர்.

உடனே திருவெண்காடர் விழித்தெழுந்து, எம் பெருமான் திருவருளைப் பல்வகையால் ஏத்தித் துதித்துத் தம் தாயிடஞ் சென்று, தாம் கண்ட கனவினைச் சொல்ல, அவரும் ஆனந்தித்து, "சிவபெருமான் நம்மிடத்தில் வைத்துள்ள பெருங் கருணைக்கு நம்மையன்றி வேறு எவற்றை ஈடாகச் செலுத்துவது!" என்று சொல்லித் துதித்தார்.

பிறகு திருவெண்காடர் காலைக்கடனை முடித்துக் கொண்டு, தம் மனைவியாருடன் தமது மனைக்குப் புறத்திலிருக்கும் சோலைக்குட் சென்று, அங்கிருந்த தம்பதிகளையும் குழந்தையையுங் கண்டு ஆனந்தங் கொண்டு எம்பெருமான் திருவருளை வியந்து வியந்து ஏத்தி, அவர்க ளருகிற் சென்று, அவர்களை வணங்கி இனிய மொழிகளைக் கூறி உபசரித்தார்.

அப்போது அந்தச் சுசீலையார், திருவருளால் நிலைமாறி, திருவெண்காடர் மனைவியாராகிய சிவகலையம்மையாரை நோக்கி, "அம்மே, நீர் மிகவும் நல்லவ

ராகத் தோன்றுகிறீர். உமக்கு இம்மகவைக் கொடுக்கலாமென்று கருதுகிறேன். இது எம்பெருமான் திருவருளால் கிடைத்த குழந்தை. இதற்குத் தந்தையும் இல்லை, தாயும் இல்லை. இது தனிக்குழவி. இதனை யாருக்கோ விற்க எங் கணவர் எண்ணியிருக்கிறார். அப்படிச் செய்யாமல் உங்களுக்கே தரும்படி சொல்லுகிறேன். இதனைப் பெற்றுக்கொண்டு செல்லுங்கள். உங்களுக்குச் சகலவித நன்மைகளும் உண்டாகும். நன்மைக்கு வித்து என்றும் புண்ணியத்தின் மூலம் என்றும் தவத்தின் பயன் என்றும் கூறும் தன்மையுடையதாக இக்குழந்தை இருக்கிறது. இதனைப் பார்க்கப் பார்க்க என் பசி மாறுகின்றது; களை தீர்கின்றது; வறுமை ஒழிகின்றது; பிறவியின் வேரும் அறும்போ லிருக்கின்றது. இப்படிப்பட்ட ஞானக் குழந்தையை நீங்கள் ஏற்றுச் செல்லுங்கள். நீங்கள் வந்தமுகூர்த்தம் நல்லமுகூர்த்தம்" என்று சொல்லி அப் பசும் பொன்னை அவர்கையிற் கொடுத்தனர்.

குழந்தையைக் கையில் வாங்கியதும் அதனை மார்புற அணைத்தார். "என்னதவம்! என்னதவம்! என்னபேறு! என்னபேறு! தந்தை தாயில்லாத் தனிக்குழவியின் முகவழகேயழகு! வடிவழகேயழகு!" என்று புகழ்ந்தார்.

சிவசருமர் வேறு ஞாபகம் உண்டாக, "என்ன காரியஞ் செய்தோம், இக் குழவிக்கு உரியவர் யாவர்? திருவெண்காடருக்கன்றோ இம் மகவினை யளிக்க வேண்டும். இப்படிச் செய்தோமே! இதுவும் ஈசன் செயலோ! அவன் இன்னும் என்ன என்ன காரியம் செய்தற் கிருக்கின்றனனோ!" என்று சொல்லிக் கொண்டிருந்தனர்.

இவற்றையெல்லாம் அருகிலிருந்து பார்த்த திருவெண்காடர், திருவருளை நினைத்துப் பேரானந்தங் கொண்டு, "ஐயரே, உம்மை யான் இங்குக் காணப் பெற்றது மருதவாணர் திருவருளாலேயே. மருதவாணர் தங்கள் விஷயத்தை யெல்லாம் முற்றும் உரைத்திருக்கின்றார். தாங்கள் என்னுடைய மாளிகைக்கு எழுந்தருளுங்கள். இறைவனுடைய கட்டளைப்படி யான் நடந்துகொள்ள வேண்டும். தங்களுக்குத் திரவியத்தை அளிக்கவேண்டும்," என்று கூறினார்.

சிவகலையம்மையாரும் சுசீலையாரை நோக்கி, "நீர் அஞ்சவேண்டுவதில்லை. நான் இந்தக் குழந்தையைப் பத்திரமாகப் பாதுகாப்பேன். இது தெய்வத் திருவருளால் கிடைத்தது என்பதை யான் அறிவேன். இந்தக் குழந்தைக்காக என் செல்வத்தை யெல்லாம் கொடுக்கச் சித்தமாக இருக்கிறேன். என் செல்வமெல்லாம் உம்முடையதே. உமக்கு வேண்டியவற்றை யெல்லாம் எடுத்துக்கொள்ளலாம்," என்றார்.

அப்பால், சிவகலையார் அத் தெய்வக் குழந்தையைத் திருவெண்காடரிடம் கொடுத்தனர். அவர் வாங்கி ஆனந்தமுற்று மீட்டுந் தம் மனைவியிடங் கொடுத்துவிட்டு, சிவசருமரையும் அவர் மனைவியாரையும் உபசரித்து அழைத்துப்போய், ஆசனத்திலிருத்தி, தம் மகவினைத் தொட்டிலிற்கிடத்தி, பொன்னாலும் மணிகளாலும் அலங்கரித்துப் புத்திரோற்சவம் கொண்டாடினர்.

அச் சமயத்தில், "சிவசருமரே, திருவெண்காடரே, கனவிலிட்ட கட்டளைப்படி நீங்கள் சீக்கிரம்

முடிக்கக் கடவீர்கள்,'' என்று அசரீரி வாக்குப் பிறந்தது. பின்பு திருவெண்காடர், திருவருளைத் துதித்து, ஒரு துலையைத் தருவித்து, ஒரு தட்டில் தெய்வக் குழந்தையைக் கிடத்தி, மற்றொரு தட்டில் பொன்னையும் மணிகளையும் சொரிய, பொன்னிருந் தட்டு மேலெழுந்தே நிற்கக் குழந்தையிருந்த தட்டு நிலத்தில் தாழ்ந்து கிடந்தது. இந்த அற்புதத்தினைக் கண்ட பலரும் அதிசயித்தனர். சிவசருமர் துலையை வலம்வந்து, " சிவபெருமானே, யான் தேவரீருக்கு அடிமைப்பட்டது பொருளாசையால் அன்றே ; திருவடித் தொண்டின் ஆசையால் அன்றோ அடிமைப் பட்டது. அப்படியிருக்கத் தேவரீர் இப்படிச் செய்வது தருமம் அன்றே ! இறைவனே, உய்விக்க வேண்டும்,'' என்று வணங்கினார்.

அப்போது, "சிவசருமரே, உம்மைச் செல்வத்தில் ஆழ்த்தற்பொருட்டன்று இப்படிச் செய்தது. திருவெண்காடர் செல்வம் தருமவழியால் ஈட்டப் பட்டதாகலின் அது தருமவழியில் செலவழிதற் பொருட்டுச் செய்தது. இந்தப் பொருளைக்கொண்டு இனித் திருவிடைமருதூரை யடையுங்கள்,'' என்று அசரீரி பிறந்தது. சிவசருமரும் மனத்துன்பம் நீங்கிப் பல்கால் இறைவனைப் பணிந்து துதித்தார். திருவெண்காடர் குழந்தையைத் துலையினின்று மெடுத்து இருக்கை சேர்ந்தனர். பின்பு பொருள்களையெல்லாம் திருவிடைமருதூரில் இருக்கும் சிவசருமருடைய திருமாளிகைக்கு அனுப்பி, அன்றே தம் மைந்தர்க்கு மருதவாணன் என்று நாமகரணஞ் செய்தார்.

சிவசருமர் மறுதினம் திருவிடைமருதூருக்குப் போகவேண்டிய தங் கருத்தைத் திருவெண்காடருக்குக் குறிப்பிக்க, அவர் அவ்வேதியரை உபசரித்து அவரையும் அவர் மனைவியையும் தேரிலேற்றி யனுப்பினார். தேரேறிப் போகிறவர்கள் குழந்தையின் பிரிவாற்றாமல் சோர்ந்து தேர்மீது சாய்ந்தனர். அது கண்டு சிவபெருமான், மருதவாணன் போலத் திருவுருக்கொண்டு, அவர்கள் கவலை நீங்கும்படி அந்தத் தேரின் ஒரு புறத்து இருந்தனர். அது கண்டு, திடுக்கிட்டுக் குழந்தையை வாரியெடுத்து அன்பினா லுருகிக் கொண் டிருக்கையில் தேர் திருவிடைமருதூரைச் சேர்ந்து அவர்கள் மாளிகை வாயிலை யடைந்தது. பிறகு அவர்கள் பார்க்கும் பொழுது குழந்தை மறைந்துவிட்டது. சிவசருமர் தம் மனைவியைநோக்கி, "நீ இந்தப் பொருளையெல்லாம் வைத்துக்கொண்டு அதிதிபூசை செய்; நான் போய்க் குழந்தையைப் பார்த்து வருகிறேன்," என்றார். அதற்கு அவ்வம்மையார் உடன்படவில்லை.

சிவசருமருக்குத் திருவெண்காடர் கொடுத்த திரவியம் திருவிடைமருதூருக்கு வந்துகொண்டேயிருந்து மூன்றாம் நாள் முற்றும் சேர்ந்தது. சிவபெருமான் அருளால் கணுதிபர் ஒருவர் காவலர் வேடத்துடன் அவ்வண்டியோடு வந்து, திருவெண்காடர் எழுதியவாறாக ஒரு கவளிகையையும், ஓர் ஓலைச் சுருளையும் சிவசருமரிடம் கொடுத்துத் தம்மிச்சைவழியே போயினர். சிவசருமர் அந்த ஓலைச்சுருளை நிமிர்த்துப் படித்து, அதனுள் மருதவாணர் சுகமாயிருக்குஞ் செய்தியும், குழந்தையுரு அமைக்கப்பட்ட படமொன்

றனுப்பிய செய்தியும் எழுதியிருக்கக் கண்டு, மிகமகிழ்ந்து, அந்தக் கவளிகையைக் கட்டவிழ்த்து, குழந்தையுரு வெழுதிய படத்தைப் பார்த்துக் களித்து, மனைவியாருக்குக் காட்டி மனந் தெளிவித்தார். அவரும் துன்பம் மாறியிருந்தனர். தமக்கு அனுப்பப்பட்ட பொருளைக்கொண்டு சிவபூசை அடியார்பூசை முதலியவற்றைக் குறைவற நடத்தி வந்தனர்.

---

## கக. மருதவாணர் செய்த அற்புதங்கள்

சிவசருமர் சென்றபின்பு திருவெண்காடரும் அவர் மனைவியாரும் வெகு அன்புடன் அருட்குழவியை வளர்த்து வந்தனர். மருதவாணர் சிறுவரோடு கூடி விளையாடும் பருவம் அடைந்ததும், ஒரு நாள் தம் வயதுப்பிள்ளைகளோடு விளையாட்டயர்ந்து அவர்களைக் களிப்பிக்கக் கடற்கரைக்குப் போயிருந்த பொழுது, திடீரென்று ஒரு படகில் ஏறி அவர்களோடு நெடுந் தூரஞ் சென்றார். அங்குப் பெருமீனொன்று இவர்கள் தோணியை விழுங்குங் குறி காட்டி வருவதைக்கண்டு, அந்தச் சிறுவரெல்லோரும் பெருங் கூச்சலிட்டு வருந்தினர். அந்த மீன் தோணிக் கருகில் வந்து கூம்பின் (பாய்மரத்தின்) மீது நின்றவருள் ஒருவனைப் பற்றி விழுங்கியது. மற்றையோர் அதைக்கண்டு நடுங்கி மூர்ச்சித்தனர். இவர்கள் மூர்ச்சித்தலைக் கண்ட மருதவாணர், அந்தச் சிறுவர் பயத்தை நீக்கும்பொருட்டு, தமது காலை நீட்டி, அந்த மீனின் தலையில் உதைத்தார். உதைத்ததும் அந்த மீன் மடிந்தது. மடிந்ததும் அதன் உடம்பினின்றும் ஒரு திவ்யபுருஷன் புறப்பட்டு விமானமேறி அந்தரத்தே நின்று மருதவாணரைத் தொழுது, "யான் மணிக்கிரீவன் என்னும்

கந்தருவன். சிந்துமுனிவரை இகழ்ந்த குற்றத்திற்காக மீனுருவம் பெற்றேன். இப்பொழுது தம் திருவடி என் பழையவண்ணத்தைத் தந்து என் துயரத்தை ஒழித்தது," என்று துதித்தான். மருதவாணரும் அவனுக்கு அருள்புரிந்து அவனைச் சுவர்க்கம் போக விடுத்து, மூர்ச்சித்துக் கிடந்த பிள்ளைகளைக் கருணையால் நோக்கலும் அவர்கள் களை தீர்ந் தெழுந்தனர். எழுந்தவர்கள் மீனால் விழுங்கப்பட்டவனைப் பற்றி விசாரிக்கவும், அவர், "அதோ பாருங்கள், அச்சிறுவன் அம்மீன் வயிற்றினின்றும் வருகிறான்," என்றனர். அச்சிறுவனும் மருதவாணர் கூறியபடி அம் மீன்வயிற்றிலிருந்து விலையுயர்ந்த மணிகளை வாரிக் கொண்டு அதன் வாய்வழியாகக் களிப்புடன் வந்தனன். அதைக் கண்டு அவர்கள் தாமும் அவ்வாறு மணிகள் சேர்க்கவேண்டுமென்ன, மருதவாணர் அவர்களை அம்மீனின் வயிற்றுட் சென்று மீளும்படி ஏவினர். அவ்வாறே எல்லோரும் நுழைந்து வாரி வந்து, மணிகளிற் சிறந்தவற்றைப் பொறுக்கி மருதவாணருக்குக் காணிக்கையாகக் கொடுத்தனர். பின் தாய் தந்தையர் நினைப்புவர, அவர்கள் கரைக்கு மீண்டு அங்குக் காத்திருந்த தம் பெற்றோரை மகிழ்வித்தனர்.

---

## கஉ. மருதவாணர் கல்வி பயிலல்

இப்படிச் சிலகாலம் கழிந்தவுடன் மருதவாணர் கல்விபயிலும் பருவம் அடைந்தனர். அதை யறிந்து திருவெண்காடர் அவரை நல்ல ஆசிரியரிடம் விட்டுச் சகல கலைகளிலும் வல்லவராகும்படி செய்யவேண்டும் என்றனர். அந்நாளில் அந்நியதேசத்து வணிகனொரு

வன் பெறுதற்கரிய மணியொன்றைக் காவிரிப்பூம் பட்டினத்து வைசியர்பாற் கொண்டுவந்தான். அவர்கள் அதனைக்கண்டு பிரமித்து விலைமதிக்கிலராகித் தம் முட் சிறந்த திருவெண்காடரிடத்திற் கொண்டுவந்து காட்டினர். அப்போது திருவெண்காடர் அந்த மணியை நோக்கி வியந்து, "மணியின் விலை கொள்வோன் விருப்பின் அளவாம். ஆயினும் இது பதினாயிரம் பொன் பெறுமெனத் தோற்றுகிறது," என்றார். அதைக்கேட்ட வணிகரெல்லோரும் "இது தக்கதே," என்று மனமகிழ்ந்தார்கள். அப்பொழுது மருதவாணர், பள்ளிக்குப்போய் வந்தவர், வழக்கம்போல், தம் பிதாவுடன் இருந்து உண்ண விரும்பிப் பிதாவை யழைக்க வந்தார். வந்தவர் அங்குக் கூடியிருந்த வணிகரையும் அவ்விடத்திலிருந்த பெருமுத்தையுங் கண்டு, "இதன் விலை யாது? இது எங்கே கிடைத்தது?" என்று வினவினர். திருவெண்காடர், மருதவாணரை நோக்கி, "குழந்தாய், உனக்கேன் இந்த விசாரம்? பசித்திருக்கிறாய், சாப்பிடப்போ," என்றனர். மருதவாணர், "அப்பா, யான் நவமணியின் இலக்கணம் ஆசிரியரிடம் பயிலும்போது கேட்டதோர் குறி இந்த மணியினிடத்திற் கண்டேன். ஆதலால் அதனை உங்களுக்கு வெளிப்படுத்த எண்ணினேன்," என்றார். அங்கிருந்த வைசியர் மணியின் வரலாற்றைக் கூற, மருதவாணர், "என் தந்தையார் மதித்த பதினாயிரம் பொன்னையும் யானே தருகிறேன், ஆனால் இம் மணி கண்ணாலும் பார்க்கத்தக்கதன்று. இதனுள் நீர் உள்ளது. இது ஆணிமுத்தன்று. இதனைத் தொட்டாலும் தரித்திரம் வியாதி முதலியன உண்டாகும். எல்லோரும் பாருங்கள்," என்று முன்பின் நோக்காது

அம்மணியை யுடைத்தார். உடனே அதனுள் இருந்த நீர் வெளிப்பட்டது. யாவரும் வியப்புற்று மருத வாணரைக் கொண்டாடினர்.

பின்பு அவர், தாம் சொல்லியபடி வணிகனுக்குப் பொருள்தர எண்ணிக் கபாடபுரத்து வாழும் தமது நண்பனுக்கு ஒரு சீட்டனுப்ப, அவன் அப்படியே பதினுயிரம் பொன்னையுங் கொடுத்தான். இந்தச் செய்தியைக் கேட்ட திருவெண்காடர் தம் புதல்வ ரிடத்தில் அச்சமும் அன்பும் மிகுந்தவரானுர்.

---

## கரு. மருதவாணர் வியாபாரம்

மருதவாணர்க்கு வயது பதினுறு நிறைந்தது. அப்போது மருதவாணர், தம்தந்தையாரிடஞ்சென்று, தமக்குத் தீவாந்தரஞ்சென்று வியாபாரஞ் செய்தலில் உள்ள அவாவைத் தெரிவித்தனர். திருவெண்காடர் திடுக்கிட்டு, மருதவாணரை நோக்கி, "அப்பா, நமக் கிருக்குஞ் செல்வம் அநுபவித்தாலுந் தொலையாதே! இன்னமும் பொருள் தேடவேண்டும் என்பதும், இந்த இளமையில் எங்களைவிட்டுப் பிரியக் கருதுவதும் தகு தியான காரியங்களல்ல," என்று வருந்திச் சொன் ஞர். அதுகேட்ட மருதவாணர், "தேவரீர் சொல் வது உண்மையே; ஆயினும் பொருள் சம்பாதித்தல் அவசியம். அன்றியும் தீவாந்தரப் பிரயாணத்தில் அறிந்துகொள்ளும் விஷயங்கள் பல. ஆதலால் விடை தர வேண்டும்," என்றனர். திருவெண்காடர், "ஆயின் நானும் உடன் வருவேன்" என்றுரைத்தனர்.

மருதவாணர், “ நாமிருவரும் போய்விட்டால் தாயார் வருந்துவர். ஆதலால் நீர் இங்கே இரும்; நான்மாத் திரம் போய்வருகிறேன்,” என்று தம் பெற்றோ ரிடத்து விடைபெற்றனர். விடைபெற்றவர் தம் வய தினராகிய வணிகச் சிறுவரோடு கலமேறிச் சென்று ஒரு தீவை யடைந்தனர். அங்குச் சிறிதுகாலம் வியா பாரஞ் செய்தபின்னர், அவர்களெல்லாம் புறப்பட்டு வேறு தீவுகளுக்குச் சென்றனர். மருதவாணர் மாத் திரம் அவ்விடத்திற்றானே யிருந்துகொண்டு தம்மிடத் துள்ள பண்டங்களை மாறிப் பொருள் சேகரித்துக் கோயில், மண்டபம், மடம் முதலியவைகளுக்கு உப யோகித்துச் சில மாதங்கள் கழித்தனர்.

வேறு தேயங்களுக்குச் சென்ற வணிகர், பெருஞ் செல்வம் தேடிக்கொண்டு, மீண்டும் மருதவாணர் இருக்கும் இடத்திற்கு வந்து, “நீர் இவ்விடத்திற் றானே யிருந்து என்ன இலாபம் அடைந்தீர்?” என்று வினவ, மருதவாணர், “யான் பொருள் சேகரிக்க வில்லை. என் பண்டங்களுக் கீடாக இவ் வூரார் கொடுத்த எருமுட்டைகளையும் அவல் கடலையை யுமே வாங்கி வைத்திருக்கிறேன்,” என்றுரைத்தனர். அவர்கள் திடுக்கிட்டு, “நீர் கொண்டுவந்த பொருளை யெல்லாம் எருமுட்டைக்கும் அவல் கடலைக்கும் மாறி விட்டுப் போனால் உமது தந்தையார்க்கு என்ன சொல்வீர்? அவர்க்குத் தவப்பேறாய் வந்த நீர் இவ் வாறு செய்தல் அழகோ! நீர் எங்களுக்கெல்லாம் தலைவராயினீர். நீர் இவற்றைத் தேடிவைத்தீர்” என்று பரிதாபத்தோடு கூறினர். அதற்கு மருத

வாணர் அவர்களை நோக்கி, "நீங்கள் என் பொருட்டுப் பரிதபிக்கவேண்டியதில்லை; என் பிதா உங்களை ஒன்றுங் கேட்கமாட்டார்" என்றார். அவ்வார்த்தைகளைக் கேட்ட தோழர் அவர்க்குப் புத்தி மாறாட்டமாயிற்றென்று நிச்சயித்து, தங்கள் தங்கள் பண்டங்களைத் தங்கள் தங்கள் கலங்களில் ஏற்றுவித்துக் காவிரிப்பூம் பட்டினம் நோக்கிப் புறப்பட்டனர். மருதவாணரும் தஞ் சரக்குகளை ஏற்றுவித்து உடன் புறப்பட்டனர்.

கலங்கள் பாய் விரித்து நடுக் கடலில் ஓடும்போது, மருதவாணர் திடீரெனப் பெருங் காற்று மழை வரச்செய்து, கலங்களைத் திசை தப்பி ஓடச் செய்தனர். அதனால் தோழர்கள் துறையறியாது பல நாள் அலைய, அவர்கள் வழிக்காகச் சேகரித்து வைத்திருந்த தின்பண்டங்களும் விறகு வரட்டி முதலியனவும் செலவாய்த் தீர்ந்தன. அவர்கள் மருதவாணரிடம் வந்து தோழமை பாராட்டி, "எங்களிடமிருந்த தின்பண்டங்களும் விறகு வரட்டி முதலியவும் ஒழிந்தன. எங்களைப் பசியும் வருத்துகிறது; குளிரும் வாட்டுகின்றது. கொஞ்சம் தின்பண்டமும் வரட்டியும் கொடுத்து உதவி செய்யுங்கள்" என்று வேண்டினர். மருதவாணர், "தோழர்களே, ஊர்சேர்ந்தவுடன் என் வரட்டி எடைக்கு எடையுள்ள வரட்டி கொடுக்கவேண்டும்" என்று சொல்லி, இசைவுபத்திரமும் எழுதி வாங்கிக்கொண்டு வரட்டிகளை நிறுத்துக் கொடுத்தனர். தின்பண்டங்களை அவர்கள் தெவிட்டக் கொடுத்தனர். அவர்கள் அவைகளைப் பெற்றுக்கொண்டு தங்கள் கலங்கட்குச்

சென்று குளிர் பசி தணிந் திருந்தனர். மழையும் விட்டது. கப்பல்களும் திசையறிந்து காவிரிப்பூம் பட்டினத் துறையை வந்து அடைந்தன. தஞ் சிறுவர் வரவை எதிர்நோக்கியிருந்த பெற்றோர்களும் அவர் களைக் கண்டதும் களித்து ஊரில் திருவிழாக் கொண் டாடினார்கள்.

---

## கசு. மருதவாணர் மறைதல்

திருவெண்காடர் மருதவாணரைக் காணும் முன் னர்த் தீவாந்தரஞ் சென்றவருள் ஒருவன் திருவெண் காடரைக் கண்டு, "ஐயா, உமது புதல்வர் அறிவு மாறியிருக்கிறார். அதனை அறிவிக்கவே யான் முன் வந்தேன்," என்று சொல்லிப் போயினான். திரு வெண்காடர் சற்று மனங்கலங்கினார். பிறகு தம்மை ஒருவாறு தேற்றிக்கொண்டு, "வந்து சேர்ந்தானே, அதுவே பெரியகாரியம்," என்று சொல்லிக்கொண்டு துறைமுகத்திற்குச் சென்று கப்பலி லிருக்கும் தம் புதல்வரைக் கண்டு ஆனந்தித்தார். பிறகு அவரைச் சுற்றிக்கிடந்த அவல் மூட்டைகளையும் வரட்டி அடுக்கு களையுங் கண்டு பிரமை கொண்டார். பிரமை கொண் டவர் தீர விசாரிக்க வேண்டும் என்று நிச்சயித்து, மருதவாணரைக் கரைக்குக் கொண்டுவந்து தனி மாளிகையில் இருத்தி, அவர் பித்தர் எனக் கேள்வி யுற்றிருந்தமையால் அவருக்குக் காவலும் அமைத்து, தாம் கப்பலுக்குச் சென்று வரட்டி, அவல்கடலை, பெட்டி, கணக்கு முதலியவற்றை எடுப்பித்துக் கொண்டு கரைக்குத் திரும்பி, மருதவாணருடன் சென்ற வணிகச் சிறுருடன் இருந்து அவற்றைச்

சோதித்தபோது, பெட்டியில் ஒரு வரட்டியும் ஓலையும் இருக்கக்கண்டார். கண்டதும் வரட்டியைப் பெட்டியில் வைத்தற்குக் காரணம் இருக்கவேண்டும் என்று நினைத்து, அதனைப் பிட்டுப் பார்க்கையில் அதனுள் ஒளிவீசும் மாணிக்கம் ஒன்றிருக்கக் கண்டார். மற்றைய வரட்டிகளைச் சோதித்தார்; அவற்றுள்ளும் அவ்வாறே மாணிக்கங்கள் இருந்தன. அவற்றைக் கண்டு மகிழ்ந்து, அவல் மூட்டைகளைச் சோதித்தார். அவற்றுள்ளும் பொன் மணல் கலந்திருந்தது. அதைப் பார்த்துப் பெருமகிழ்ச்சி யுடையவராய் ஓலையை யெடுத்துப் பார்த்தார். அது, உடன்வந்த தோழர்கள் மருதவாணரிடத்துப் பெற்ற வரட்டிக்காக எழுதிக் கொடுத்த கடன் சீட்டாகவிருந்தது. அதைப்பற்றித் திருவெண்காடர் அவ் வணிகச் சிறுவரைக் கேட்க, அவர்கள் அது தாம் எழுதிய சீட்டென்றே ஒப்புக் கொண்டனர். அப்படி ஒப்புக்கொண்டவர், "நாம் மருதவாணரைச் சித்தப்பிரமை கொண்டவர் என்றுரைத்தோமே; இப்பொழுது திருவெண்காடர் நம்மைக்குறித்து என்ன எண்ணுவார்! நாம் திருவெண்காடரை மோசஞ் செய்யச் செய்த சூழ்ச்சி என்றல்லவோ கருதுவார்! இதற்கு என் செய்வது! சாதாரண வரட்டி என்று நினைத்துப் பத்திரம் எழுதித் தந்தோமே; இப்பொழுது மாணிக்க வரட்டி தர நேர்ந்ததே! மாணிக்கம் பெற எங்குச் செல்வது!" என்று தயங்கினார்கள்.

திருவெண்காடரோ தம் புதல்வர் கொண்டுவந்த மணிக் குவியலையும் பொற்குவியலையுங் கண்டு பெருமகிழ்ச்சிகொண்டு, அவரைத் தழுவ எண்ணி, அவ

ரிருந்த காவலறைக்கு ஆவலுடன் ஓடி, அங்கு அவ ரைக் காணுது பொருமலுடன் திரும்பினுர். தம் மாளிகையிற் றேடினுர். தம் நண்பர் வீடுகள்தோறும் நுழைந்து துருவினுர். நந்தவனங்களிற் சென்று பார்த் தார். செண்டு வெளிகளில் கண்டுவரச் சொன்னுர். கப்பற்றுறையில் தந்துரையைப் பார்த்துவந் துரைக் கக் கூறினுர். நகரமுற்றும் தேடிவர ஏவினுர். எங் குங் கண்டிலர்; எவருங் கண்டிலர். காணுமற் போக வும் திருவெண்காடர், "எங்குச் சென்றனர்! எவ் வாறு சென்றனர்! தீர விசாரியாது என்னருமைப் புதல்வனைத் தண்டித்தமையால் இவ் விளைவு உண்டா யிற்று" என்று மனம் புழுங்கினுர்.

மருதவாணரோ திருவிடைமருதூரில் தம்மை நேசித்துப் பூசித்துவந்த சிவசருமரையும் அவர் மனை வியையும் சோதியில் மறையச் செய்து, தாமும் மகா லிங்கத்தோடு பிரிவறக் கலந்தார்.

---

## கரு. துறவு

திருவெண்காடர் மருதவாணர் பிரிவைச் சகி யாது வருந்திக்கொண் டிருக்கையில், அவர் மனைவி யார், ஒரு சிறு பெட்டி கொண்டுவந்து அவர்முன் வைத்து, "இதைத் தேவரீர் வந்தவுடனே கொடுக்கும் படி தமது புதல்வர் கொடுத்துப் போயினர்" என்று உரைத்தார். உடனே திருவெண்காடர் ஆவலுடன் பெட்டியை எடுத்துத் திறந்து பார்த்தார். அதனுள் ஒரு காதற்ற ஊசியும் ஓர் ஓலை நறுக்கும் இருக்கக் கண்டு, மிகுந்த ஆச்சரிய முடையவராய் அவ் வோலை

யைப் பார்த்தனர். அதில் "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே" என்று எழுதியிருந்தது. அதைப் படித்துப் பார்த்த இவர், மருதவாணரது திருநோக்கம்பட்டு முன்னமே பக்குவம் உற்றிருந் தமையாலும் பூர்வத்தில் செய்த புண்ணியத்தினை முடிக்கவந்த புண்ணியமூர்த்தியாதலாலும், அவ்வள விலேயே சிவஞானப் பெருஞ்செல்வம் கைவரப் பெற் றார். கவலை யெல்லாம் அற்றுப் பேரானந்தத்தில் மூழ்கி, திருவருட் டுணையால், "பட்டைக் கிழித்து" என்றும் "வாதுற்ற" என்றும் தொடங்கும் திருப் பாடல்களைப் பாடினார். இரண்டாவது பாசுரத்தில், தாம் நறுக்கிற் கண்ட, "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே," என்பதை அமைத்துப் பாடி யருளினார். வேறு சில பாடல்களையும் பாடினார். பின் தாயாரை நோக்கி, "அம்மே, உமது தவம் பலித் தது. நீர் செய்த தவம் சிறந்த தவம். குருபரன் ஆணை வழி நிற்கவேண்டியவனாயினேன். அதற்காக வருந்தாதிரும்," என்று கூறத் தாயார் "ஐயனே, எனக்கு அந்தியகாலம் சமீபித்தது; என் ஈமக்கடனைக் கழித்துச் செல்லலாகாதா?" என்று கேட்டனர். அதற்கு அடிகள், "அவ்வாறே ஆகுக," என்று மொழிந்து, எதிர் நின்ற தமது நண்பரும் தலைமைக் காரியஸ்தருமாகிய சேந்தனாரை நோக்கி, "இப்பொரு ளெல்லாம் உலகினர் அள்ளிச் செல்லச் செய்வீர்," என்று சூறையிடப் பணித்து யாதொரு தொடர்பும் இல்லாராய்ப் புறப்பட்டார். அது கண்டு அவர் மனைவியார் வந்து வணங்கி, "அடியேனும் உடன்வர அனுமதி தந்தருளவேண்டும்," என்று வேண்டினார் அடிகள், "உனக்கு என்னோடு தொடர்ந்து வரச் சக்தி

யில்லை. நீ இவ்விடத்தில் இருந்துகொண்டு அடியார் பூசையும் சிவபூசையும் செய்துகொண்டிரு. அப்படிச் செய்துகொண் டிருப்பாயாகில் கடைநாளில் எம்பெருமான் திருவடி நீழலில் இளைப்பாறக் கூடும்," என்று கூறி அவரை அவ்விடத்தில் நிறுத்திவிட்டு, ஆதரவற்றவர்போல — மனைவிமக்கள் இல்லாதவர் போல — சுற்றம் இல்லாதவர்போல அவ்வூர்ப் பொது மண்டபத்திற் சென்று தங்கியிருந்தார். அப்போது அவ்வூரிலுள்ள சுற்றத்தினரும் நண்பரும் முதியோரும் பிறரும் இச் செய்தி கேட்டு வந்து, "ஐயரே, எங்களுக் கெல்லாம் தலைவராகவிருந்தும் இக்கோலத்தைப் பூண்டீர்களே! இனி எமக்குத் துணையாவார் யாவர்?" என்று சொல்லி இரங்கினர்.

அது கேட்ட அடிகள், "உயிர் நீங்கிய காலத்தில் மனைவியும் மக்களும் வாழ்வும் பொருளும் வாசல் மட்டே; சுற்றம் மயானமட்டே; ஆதலால் அவர்கள் மீது ஆசைவையாமல் மறுமைக்குத் துணையாகிய அறத்தை முற்றுப்பெறச் செய்யவேண்டும்" என்றும், "உடலைக்காக்கத் திருவோடும் கந்தையும், உயிரைக் காக்கப் பஞ்சாட்சரமும் சிவனடியாரும் உண்டு," என்றும், தாமடைந்த ஆனந்தத்தினை உலகினரும் அடையவிரும்பி, "சுற்றத்தை ஒழித்துப் புறந்திண்ணையிலிருந்து யோகநித்திரை செய்யுங்கள்" என்றும் பொருள் தரும் பாடல்களைப் பாடி, மவுனங்கொண்டனர். இப்பாடல்களைக் கேட்டு நாணமுற்று, வந்த சுற்றத்தினரும் நண்பரும், "இந்நிலை நினைத்தற்கும் அரிது," என்று ஏகினர்.

---

## கசு. அரசன் செய்கை

அடிகள் துறவு பூண்ட செய்தியையும் அவரது செல்வம் அனைத்தையும் ஊரார் அள்ளிச் சென்ற செய்தியையும் கேள்வியுற்ற அந்நாட் டரசன் வந்து நிதியறை கொள்ளை யாகாவண்ணம் தடுத்து, அடிகள் தமக்கை மகனை வரவழைத்து, அவர்கள் பாதுகாப்பிற்கு வேண்டிய பொருளையும் இருத்தற்கு வீட்டையும் கொடுத்து, அவர்களை அவ்விடத்தில் இருக்கச் செய்து, மற்றப் பொருளைத் தர்மசாலைக்கு உபயோகிக்கக் கட்டளையிட்டான்.

பின்பு, அடிகளுக்கு நண்பரும் தலைமைக் காரியஸ்தருமான சேந்தனாரது உண்மைநிலையை யறியாது, அவரை நோக்கி, "திருவெண்காடர் செல்வம் அளவு கடந்ததென்று பலரும் சொல்லக் கேள்வியுற்றிருக்கின்றோம். ஆதலால் இன்னும் அவர் செல்வம் எவ்வெவ் விடத்துள்ள தென்பதைத் தெரிவியும்," என்று கேட்க, சேந்தனார் அரசனை நோக்கி, "இருந்தவை இவ்வளவே," என்று மொழிந்தனர். அரசன் அவர் மொழியில் ஐயங்கொண்டு அவரைச் சிறைசெய்து விட்டு, அவர் காணி, பொருள், இடம் எல்லாவற்றையும் திருவெண்காடர் பொருளென்று கவர்ந்தான்.

சேந்தனார் மனைவியார் அரசனது கொடுங்கோலுக்கு அஞ்சித் தமது மைந்தனை எடுத்துக்கொண்டு வேற்றூர் சென்று கூலிவேலை செய்து ஜீவித்து வந்தார்.

அரசன் பின்பு, அடிகளிருக்கும் மண்டபத்திற்கு வந்து, "இப் பரதேசி கோலங்கொண்டு நீர் அடைந்த விசேடப்பலன் யாது?" என்று வினவ, அவர், "நீர் நிற்க ; நாம் இருக்க," என்றார். அரசன் அதுகேட்டு நாணமுற்றுச் சென்றான்.

## கஎ. தமக்கையார் செய்கை

அடிகள் பசிவந்தபோது ஊருட்சென்று பிச்சையேற்றுண்டும், பொதுமண்டபத்தில் இருக்கும்போது சமாதியில் இருந்தும், சிறுவர்களைச் சந்திக்கும்போது அவருடன்கூடி ஆடியும் ஆனந்தமாகக்காலத்தினைக் கழித்துவந்தனர்.

இவர் செய்கையைக் கண்ட தமக்கையார், மனம் பொறுக்காமல், "இவர் இறந்தாலும் நன்மையே," என்று நினைத்து, விஷங்கலந்த ஒட்டப்பம் சமைத்து இவர் உண்ணக் கொடுப்பித்தார். அந்தச் செய்தியைத் திருவருளால் திருவெண்காடர் அறிந்து, "தன்வினை தன்னைச் சுடும், ஒட்டப்பம் வீட்டைச் சுடும்" என்று சொல்லி, பிட்ட துண்டைத் தமக்கையார் வீட்டு இறப்பிற் செருகினர். செருகியதும், அவ்வீடு, ஒருவராலும் தணிக்க முடியாதபடி எரிந்து நீறாகியதோடு அவ்வூர் முழுவதும் எரிந்து நீறாகியது. அது கண்ட ஊரார், ஓடிவந்து அவர்காலில் விழுந்து, தம் பிழையைப் பொறுக்கும்படி வேண்டினர். வேண்டவும் அடிகள் ஒரு செய்யுளைப் பாடி அப்பெருந்தீயைத் தணிவித்தனர்.

பிறகு திருவெண்காடர் திருவெண்காட்டையடைந்து சிவபெருமானைத் தரிசித்து, பலியேற்றுண்டு, "குடியிருந்த மனைக்குக் கொள்ளிவைக்க வேண்டும்," என்று சொல்லிக்கொண்டே அவ்விடத்தில் இருந்துவந்தனர்.

---

## கஅ. தாயார் கடனைக் கழித்தல்

அடிகள் திருவெண்காட்டில் இருந்து வருகையில், காவிரிப்பூம் பட்டினத்தில் இவர் தாயார் தேக

வியோகம் அடைய, அவரது உடலை உறவினர் வழக்கப்படி ஈமக்கடன் கழிக்க மயானத்திற் சேர்த்தனர். இந்தச் செய்தியை அடிகள் திருவருளால் உணர்ந்து தாம் தமது அன்னைக்குச் சொல்லியவண்ணம் முடிக்க நினைத்துப் புறப்பட்டுவந்து மயானத்தை யடைந்த வளவில், இவரைக்கண்ட சுற்றத்தார் ஒதுங்கி நிற்க, தாம் அருகே சென்று, அவர்கள் அடுக்கிவைத்திருந்த சிதையைத் தள்ளி, வாழைப்பட்டையாற் சிதை யடுக்கி, அதன்மீது தாயாரைக் கிடத்திப் பல அரிய பாடல்களைப் பாடி ஞானாக்கினியால் தகனஞ்செய்து, அவரைச் சிவபெருமான் திருவடி நீழலில் கூடும்படி தியானத்தால் அந்தியேட்டி நிறைவேற்றி அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டார்.

---

## கக. திருவிடைமருதூர்

காவிரிப்பூம் பட்டினத்தை விட்டுப் புறப்பட்ட அடிகள் திருவிடைமருதூரை யடைந்தனர். அங்குள்ள சிவனடியார் இவரது வரவு உணர்ந்து எதிர் கொண்டு வணங்கச் சிவபெருமான் திருவாலயத்தை யடைந்து, சந்நிதியில் நின்று, மனமுருக, உடல் குழைய, என்பு நெக்குவிட்டு வியர்வெழ, கண்ணீர் ஆறாகப் பாய, வாயாரப் பாடினார். முப்பது செய்யுளைக்கொண்ட திருவிடைமருதூர் மும்மணிக்கோவை யென்னும் பிரபந்தத்தினைச் செய்தனர். அடிகள் முதற்பாட்டில் அர்த்தநாரீசுவர மூர்த்தத்தை மிக அழகாக வர்ணித் திருக்கின்றார். அடிகள் அச் செய்யுளில் பச்சிலையிடினும் முத்திகொடுக்கும் எம்பெருமானுடைய திருவடியையும் எம்பெருமாட்டியின் திருவடியையும், இறைவன் இடையையும் இறைவியின் இடை

யையும், முதல்வன் ஆகத்தையும் முதல்வியின் ஆகத்தையும், தலைவன் திருக்கரத்தையும் தலைவியின் திருக்கரத்தையும், தெய்வநாயகன் நாட்டத்தையும் தெய்வநாயகியின் உலகேழ்புரக்கும் நாட்டத்தையும், தவப்பெருஞ் செல்வன் திருமுடியையும் அருட்பெருஞ் செல்வியின் திருமுடியையும் புகழ்ந்திருக்கும் விதத்தினைப் படிக்க வாய் மணக்கும், கேட்கச் செவி மணக்கும், நினைக்க மனமணக்கும் என்பது திண்ணமே. ஏழாவது செய்யுளில் தன்னுயிர்போல மன்னுயிர்க்கிரங்காச் செல்வர் வாழ்க்கையையும் தொண்டர் வாழ்க்கையையும் சீர்தூக்கிப் பேசியுள்ளார். இப்படியே ஒவ்வொரு செய்யுளும் அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு விளங்க அப் பிரபந்தத்தினைப் பாடிய பின்பு மனைகள்தோறும் பிச்சையேற்றுண்டு கோபுரத் திருவாயில் குடியாகக்கொண்டு சிவயோகத்தில் வீற்றிருந்தருளினார்.

---

## உ௦. தல யாத்திரை

அப்பால் ஒருநாள் இடைமருதுடையார் அவர்து கனவில் அவ்வூர்க் காவலன் போலத் தோன்றி, "நீ யார்?" என்று வினவினர். அப்போது அவர், "ஊர்க்காவலனே, நான், நான் என்று பதிலுரைப்பது தோலோ, நரம்போ, தசையோ அறியேன்" என்றனர். உடனே எம்பெருமான் மறைந்தருளினார். தோன்றி மறைந்தவர் தோன்றாத்துணையாகிய இறைவனே என்றுணர்ந்து, ஆராமை மேற்கொண்டு, அன்பாற் கரைந்து, கரைந்துருகி, அழுது தொழுது, அவர் நின்ற நிலத்து அடிச்சுவட்டைக் கண்டு பணிந்து துதித்திருந்தனர்.

பின்பு ஒருநாள் நீர்விடாய்ப்பட்டு எங்கும் குடிநீர் பெறுமல் வருந்தி மருதரைப்பாடிப் பெற்று, உடம்பை அருவருத்து, ஒருபுறந் திண்ணையில் படுத்துறங்கினர். அவர் கனவில் என்றும் உறங்காது உயிர்களைக் காக்கும் காவலர் எழுந்தருளி, "வெண்காடனே, இனி நமது திருப்பதிகள்தோறுஞ் சென்று பாடுவாயாக," என்று கட்டளையிட, உடனே விழித்தெழுந்து, அக்கட்டளையின்படி பல செந்தமிழ்ப் பாடல்களைப் பாடி, மருதவனத்தையர் சந்நிதியையடைந்து, அன்பினுற் கரைந்துருகிப் பாடி விடைகொண்டு, திருக்குடமூக்கு, காரோணம் முதலிய திருப்பதிகளை வணங்கி, திருவாரூருக்குச் சென்று அடியவர் எதிர்கொள்ளத் திருக்கோயிலையடைந்து வீதிவிடங்கப் பெருமானைத் தொழுது, அங்குச் சில காலந் தங்கியிருந்தார்.

அவர் அங்கிருக்குங் காலத்தில் சிவபக்தியில் சிறந்தவனொருவன், அடிகளிடத்தில் பேரன்பும் பக்தியும் செய்து, காலந்தவறுமல் திருவமுது செய்வித்துபசரித்து, இரவும் பகலும் பிரியாணுகித் தொண்டு செய்து வந்தான். இவன் தன் தாய்க்கு ஒரே மகன். இவன் தந்தையோடு பிறந்த நல்லத்தை ஒருத்தியிருந்தாள். அவளுக்கு ஒரே ஒரு பெண்ணுண்டு. அப்பெண்ணை இவனுக்கே கொடுத்து, தமையன் குடியையும் தன் குடியையும் விளங்கப்பண்ணவேண்டுமென்னும் கருத்துள்ளவளாய் அவன் தாய்க்குத் தெரிவிக்க, அவள் அந்தச் செய்தியை மகனுக்குத் தெரிவிக்க, அவன் அதற்கிசையாமல் நிற்க, அவ்விருவரும் வருந்தித் தமது குறையை அடிகளிடத்தில் விண்ணப்பஞ் செய்துகொண்டனர். அடிகள் அவ் விருவருடைய

முறைப்பாட்டுக்கும் இரங்கி, இனி நடக்கப்போவதை யும் நினைத்து, அச்சிறுவனைநோக்கி, "அவ்விருவரு டைய மனக்குறையை ஒழித்துவிடு ; இறைவன் திரு வருள் உண்டாகும் காலத்தில் உண்டாகும்" என்று மொழிந்தனர். அப்போது சிறுவன், பட்டினத்தாரை வணங்கி, "எம்பெருமானே, தேவரீர் திருவடியைப் பிரியாமல் தொண்டுசெய்து கிடக்க நினைத்த எனக்கு தேவரீர் இவ்வாறு கட்டளை யிட்டீர்களே. இதுவும் என் வினைதானே ! ஆயினும் விவாககாலத்தில் தேவரீர் எழுந்தருளி ஆசீர்வதிக்கவேண்டும்," என்று வேண்ட, அடிகளும் அப்படியே செய்வதாகக் கூறினர். பிறகு விவாக காலத்தில் மணப்பந்தலில் அடிகளும் போய் அவனை வாழ்த்தி, "நாப்பிளக்கப் பொய்யுரைத்து" என்னுஞ் செய்யுளைப்பாடி ஆசீர்வதித்தனர். அப்பால் அச்சிறுவன், மனைவியோடு வாழ்ந்திருக்கையில், ஒரு நாள் ஆயுள்முடிந்து இறந்தான். எல்லோரும் கூக்குர லிட் டழுதனர். அத்தருணத்து, திருவருள் இச்சை வழியே உலவும் அடிகள், அவ்வீதிவழி வந்து, சங்கதி கேள்விப்பட்டு இரக்கமுற்று அப் பிணமகனை நோக்கி, "மண்ணு முருகும்" என்ற பாட்டைச் சொல்லிய வளவில் அப் பிணமகன் உயிர்பெற்று உறங்கி விழித் தவனைப்போல் எழுந்து வணங்கி நின்றான். அவனுக் குப் புத்தி கூறிவிட்டு அடிகள் பாண்டிநாட்டுத் திருப் பதிகளைத் தரிசித்துக் கொங்குநாடு சென்று அங்கு மவுனவிரதத்தோடு சிலகாலம் இருந்தனர்.

- ஒரு நாள் அர்த்தராத்திரியில், பசி வருத்தச் சென்று, ஒரு மூர்க்கன் வீட்டுத் தலைவாயிலில் நின்று கை தட்ட, அவன் இவரை அறியாமல் கள்ளனென் றெண்ணித் தடியெடுத்தோடி வந்து அடித்தான். இவர்

தாம் நின்ற நிலை பெயராமல், சிவ சிவ என்று நிற்க அடுத்த வீட்டுத் திண்ணையிற் கிடந்தவன் ஓடிவந்து அந்த மூர்க்கனை விலக்கி, அடிகளை அழைத்துப்போய் அமுது படைத்துப் பசியாற்றி உபசரித்தான். அப்போது அடிகள் திருவருளை நினைந்து,

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லஎன் சிந்தைபெற்றுச்
சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே

என்று சொல்லி, உடனே

இருக்கு மிடந்தேடி என்பசிக்கே அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன் — பெருக்க
அழைத்தாலும் போகேன் அரனேஎன் தேகம்
இளைத்தாலும் போகேன் இனி.

என்னும் வெண்பாவைப் பாடி, அங்கு நின்றும் புறப்பட்டுத் துளுவநாட்டிற் சென்று கோகரணம் பணிந்துபோய் உஞ்சேனை மாகாளம் அடைந்து மாகாளேச்சுரரைப் பணிந்து, நகரையடுத்த சிறுபுறங் காட்டிலுள்ள தொரு கணபதி யாலய மடைந்து பரஞான நிட்டையில் வீற்றிருந்தருளினர்.

---

## உக. கழுமரம் பற்றி எரிதல்

அடிகள் அங்கிருந்து வருநாளில், அந் நகரத்தை யாளும் அதிதீவிர பக்குவியாகிய பத்திரகிரி மகா ராஜாவுக்குச் சிவபெருமான் அருள்புரியுங் காலம் அடுத்தது. அவர் அரண்மனையிற் களவுசெய்யும் இச்சையோடு சில கள்ளர் புறப்பட்டுவந்து, இக்கணபதி ஆலயத்தின் முன் நின்று தங்களுக்குக் களவு வாய்க்க வேண்டுமென்று கணபதியைப் பிரார்த்தனை செய்து

கொண்டு, அரண்மனையுட் புகுந்து தம் ஆசை தணியு மட்டும் கருவூலத்து நிதிக்குவைகளையும் மணிக்குவை களையும் வாரிச் சுமைசெய்து எடுத்துச்செல்லுகையில், பிரார்த்தனை பலிக்கப் பண்ணின விநாயகர் நினைப்புண் டாக, சந்நிதியை யடைந்து, தங்களுக்குக் கிடைத்த வற்றுள் விலைமதிப்பரிய ஓர் அரதன ஆரமெடுத்து அவர்க்குச் சார்த்திவிட்டுத் தம்வழியே போயினர். அப்போது இருட்போதாகையால் ஆரம் கணபதி கழுத்தில் விழாது அருகில் சிவயோகத்திலிருந்த அடி கள் கழுத்தில் விழுந்தது.

அரசன் அரண்மனையில் களவுபோன சிறிது நேரத்திற்கெல்லாம் காவலர் வெளிப்பட்டு நகரமெல் லாம் கள்வரைத் தேடிவிட்டுப் புறங்காட்டில் அடிச் சுவடுகண்டு அதனைப் பற்றிக்கொண்டு, கணபதி ஆல யத்தை யடைந்து, அங்கு ஆரங் கழுத்தில் அணிந்து வீற்றிருக்கும் அடிகளைக் கண்டனர். கண்டதும் விரைந்தோடி வந்து அவரைப் பற்றி இழுத்துப் பல் வகையால் துன்பப்படுத்தினர் அப்போது அடிகள் நிஷ்டை கலைந்து, நடந்த சங்கதி யொன்றும் அறியா ராதலால், அவர்கள் துன்புறுத்தும்போதெல்லாம் தடுத்தல் செய்யாது, 'சிவ, சிவ' என்று சொல்லிக் கொண் டிருந்தனர். காவலர் இவரை வைது, இவர் மவுனத்தைக் குறித்துப் பலவாறு பேசி முடிவில் கையும் களவுமாக அகப்பட்ட இவரை அரசரிடத்துக் கொண்டுபோய் விடுதலே தாம் தண்டத்தினின்றும் தப்புதற்கான வழியென்று துணிந்து, அரசர்முன் கொண்டுபோய் நிறுத்தி, " இக்கள்ளனைக் கழுவேற் றினாலன்றி மற்றைக் கள்ளர் அகப்படார்," என்று சொல்லித் தாங்கள் இவரைக் கையுங் களவுமாகப்

பிடித்ததையுங் கூறி உடனே தண்டிக்க வேண்டுமென்றனர். அரசரும் ஆராய்ச்சி யில்லாமல் இவரைக் கழுவேற்றுமாறு கட்டளையிட்டார். காவலர் அடிகளைக் கழுமரத்தின் முன் நிறுத்த, அவர் புன்னகை செய்து,

"என்செய லாவ தியாதொன்று மில்லை"

என்னுஞ் செய்யுளைக் கூறிய வளவில் கழுமரம் பற்றி யெரிந்துவிட்டது.

---

## உஉ. பத்திரகிரி யரசர் சிஷ்யராதல்

கழுமரம் பற்றி யெரிந்த சங்கதியைக் காவலர் அரசரிடம் அறிவித்தனர். அந்த அரசர் திடுக்கிட்டுப் பாதசாரியாக ஓடிவந்து, பற்றி யெரியும் கழுமரத் தருகில் நிற்கும் திருவெண்காட் டடிகளைத் தரிசித்து, அவர் பாதத்தில் விழுந்து, தம்மை ஆட்கொள்ளும்படி பிரார்த்தித்தார். அடிகளும் கருணையால் அவரை நோக்கி உபதேசஞ் செய்ய, அவர் அப்பொழுதே ராஜகோலத்தை நீக்கி, செல்வம் அனைத்தையும் துறந்து, தம் நகரத்தைத் திரும்பிப் பாராது இவர்பின் போகச் சித்தமாயினர். அதை யறிந்த அடிகள், பத்திரகிரியாரைத் திருவிடைமருதூருக்குச் செல்லக் கட்டளையிட்டுத் தாம் அங்கு நின்றும் புறப்பட்டுக் காசி, கேதாரம் முதலிய வடநாட்டுத் திருப்பதிகளை வணங்கி, மேற்குக் கடற்கரைவழியே வந்து, மறுபடியும் கொங்குநாட்டிற் புகுந்து, பிறகு பாண்டிநாட்டை யடைந்து திருக்குற்றாலம் முதலிய திருப்பதிகளை வணங்கி, மறுபடியும் திருவிடைமருதூரை யடைந்து மருதவாணரைப் பணிந்து கீழைக் கோபுர வாயிலில் வீற்றிருந் தருளினர்.

பத்திரகிரியாரும் அங்கு வந்து சேர்ந்தனர். அவரை அடிகள் மேலைக் கோபுரவாயிலில் இருக்கும்படி சொல்லினர். அவரும் குரு ஆணைப்படியே அங்கிருந்துகொண்டு நாள்தோறும் பிச்சை யேற்றுவந்து குரு நிவேதனம் ஆனபின்பு சேடத்தைத் தாம் உண்டு சிவயோகத்தில் வீற்றிருந்தனர்.

இவ்வாறு நிகழுங்காலத்தில் ஒருநாள், பத்திரகிரியார், சேடத்தினை உண்ணப் புகும்போது, ஆதரிப்பாரில்லாப் பெட்டை நாய்க் குட்டியொன்று வந்து, அவரெதிரில் நின்று வால்குழைத்து எளியமுகங்காட்டிப் பசியால் தான் வருந்துதலைக் குறிப்பித்தது. அதனைக் கண்டு பத்திரகிரியார் இரக்கங்கொண்டு அச்சேடப் பிரசாதத்தில் சிறிது அதற்கிட்டு அதன் பசியைத் தீர்த்தார். அன்று முதல் அந்நாய்க்குட்டி அவரை விட்டு நீங்காதிருந்தது.

அந் நாய்க்கு அருள்செய்யத் திருவிடைமருதூருடையார் மனங்கொண்டு, சித்தவேடத்துடன் பட்டினத்தடிகள் முன் எழுந்தருளி, "ஐயா, என்னைப் பசித் தீ சுடுகின்றது. பிச்சையிடுவீரோ?" என்று கேட்டனர். கேட்கவும் அடிகள் புன்னகைசெய்து, "ஐயரே, கோவணமே பாரம் என்று கருதும் யான், தேவரீர் பசியை எங்ஙனம் தீர்ப்பேன்! மேலைக் கோபுரவாயிலில் ஒரு சமுசாரி யிருக்கிறான். அவனிடஞ் செல்வீராயின் உமது பசி நோய் நீங்க வழி ஏற்படும்" என்றுரைத்தார்.

அவ்வுரை கேட்டுப் பெருஞ்சித்தர், மேலைக் கோபுரவாயிலில் இருக்கும் பத்திரகிரியாரைக் கண்டு, கீழைக் கோபுரவாயிலிலிருக்கும் அடிகள் உரைத்ததை

யுரைத்து, "என் பசியைத் தீர்ப்பீரோ?" என்று கேட்டனர்.

பத்திரகிரியார் அடிகள் உரைக் குறிப்பை யுணர்ந்து, "ஐயரே, இவ்விரந்துண்ணும் ஓடும் எச்சிலுண்ணும் நாயுமோ என்னைப் பிச்சை தரவல்ல சமுசாரியாக்கியது! ஆண்டவர் திருவுள்ளம் இதுவாயின் இனி இவைதாம் எனக்கு என்செய்யவல்லன!" என்று கையிலிருந்த ஓட்டைச் சுழற்றி யெறிந்தார். அது சென்று நாயின் பொறியில் தாக்க ஓடும் உடைந்தது; நாயும் இறந்தது. பசியுடையார்போல் வந்த அன்புடைச் சித்தரும் புன்னகையோடு மறைந்தார். பத்திரகிரியாரும் எம்பெருமான் திருவருளை வியந்து பல செந்தமிழ்ப் பாடல்களை அருளிச் செய்து சிவயோகத்தில் அமர்ந்திருந்தார்.

---

## உங. நாய் பெற்றபேறு

அந்த நாய் சிவயோகி கையினால் இறந்ததனால் தீவினை நீங்கிக் காசிராஜன் விசுவகுத்தன் மகளாகப் பிறந்தது. ஞானவல்லி யென்னும் பெயர்பூண்டு வளர்ந்து மங்கைப்பருவம் அடைந்ததும், அப்பெண்ணின் பெற்றோர், இவளுக்குத் தகுந்த நாயகன் யாவன் என விசாரித்து நாயகன் கிடைக்காமையால் மனவருத்தப் பட்டுக்கொண்டு இருந்தனர். அக் குறிப்பினை யறிந்த ஞானவல்லி தன் தந்தையை வணங்கி, 'யான் ஒருவருக்கும் உரியளல்லள். என் குருநாதன் தென்னாட்டுத் திருவிடைமருதூர்த் தேவாலயத்து மேலைக் கோபுர வாயிலில் எழுந்தருளி யுள்ளார். அவரிடம் யான் செல்லவேண்டும். யான் அவருடைய பொருள். என்னை அவரிடஞ் சேர்த்து அவருக்கு உரியவளாக்கு

வீரேல் நீவிர் யாவரும் முத்தியடைவீர்கள். இக் காரியத்தை என் விருப்பப்படி முடிக்க வேண்டும்,'' என்று பிரார்த்தித்தாள் பூர்வஜன்ம வாசனையால்,

அரசன் அதுகேட்டு, "இச் சிறுபெண்ணிற்கு இவ்விதக் கருத்து உண்டானதற்குக் காரணம் புரிய வில்லை. ஆயினும் விசாரிப்போம்,'' என்று தனக் குள் சொல்லிக்கொண்டு, மகளைநோக்கி, "நீ சொன்ன விஷயத்தினைக் கவனிக்கிறேன்,'' என்று சொல்லி அவ்விடத்தைவிட்டு நீங்கிவந்து, அறிவுடையோரிடம் கலந்து யோசித்து, ஒற்றரைத் தருவித்து, திருவிடை மருதூர் மேலைக்கோபுர வாயிலில் இருப்பவர் நிலை மையை யறிந்து வரும்படி கூறினன். அவர்களும் அப்படியே சென்று பத்திரகிரியாரைத் தரிசித்து வந்து, அவர்பெருமையை அரசனிடம் எடுத்துக் கூறி னர். அதுகேட்டு அரசன், "புண்ணியம் பழுத்தது'' என்று சொல்லிக்கொண்டு சிவிகையைத் தருவித்து அதில் ஞானவல்லியை ஏற்றிக்கொண்டு பரிவாரத் துடன் புறப்பட்டுத் திருவிடைமருதூரை யடைந்து மேலைக்கோபுர வாயிலருகில் மகளைச் சிவிகையினின் றும் இறக்கி விட்டான்.

அப்பெண் அவர் யோகசமாதியிலிருக்கும் இடத் தினை விசாரித் தறிந்து, அங்குச் சென்று, அவர் சமாதி கலையும் வரையில் காத்திருந்து, அவர் விழித்த தும், "எம்பெருமானே, அடிநாய் மறுபடியும் திரு வடிப் பேற்றிற்கு வந்தது,'' என்றாள்.

எல்லாம் உணர்ந்த ஐயர், அப் பெண்ணின் வர லாற்றினை உடனே யுணர்ந்து, அப்பெண்ணை அழைத் துக்கொண்டுபோய்க் கீழைக் கோபுரவாயிலிலிருந்த

ஞானமணியாகிய தங் குருமணியின் சந்நிதியில் விட்டு, "எம்பெருமான் எச்சிலுண்ட நாய்க்கும் இப் பிறவி நோய் வரலாமோ!" என்று கண்ணீர்வார விண்ணப் பஞ் செய்தார். அடிகளும், "சிவன் செயலுக்கு என் செய்யவல்லேம்!" என்று திருவருளை நாடி நின்றனர். உடனே ஒரு பெருஞ் சோதி உண்டாயிற்று. அச் சோதியில் சிவபெருமான் திருவாணையின்படி பத்திர கிரியார் அப் பெண்ணோடு சென்று கலந்தனர். உடனே சோதியும் மகாலிங்கத்துட் சென்று ஒடுங்கி விட்டது.

அதைக் கண்ட அடிகள் சிவபெருமான் பெருங் கருணையைப் புகழ்ந்து, "இன்னும் என்னையும் என் வினையையும் இங்கு இருத்திவைத்திபோலும். ஏழை யேன் என்செய்வேன்!" என்று மனமுருகுந் தருணத்தில், இறைவர் திருவருளால், "அன்ப, நம் ஒற்றி யூர்க்கு வருதி," என்று பெருவாக்கு ஆகாயத்தில் பிறந்தது. அடிகள் அதனைச் செவிநிறையக் கேட்ட தும் மகாலிங்கப் பெருமானை வணங்கி விடைபெற்றுத் திருவெண்காட்டினை யடைந்தனர்.

---

## உச. சேந்தனார் வரலாறு

அடிகள் திருவெண்காட்டினை யடைந்தவுடனே எம்பெருமான் சந்நிதியை யடைந்து, ஆனந்தபரவச ராய் மனங் குழைந்துகுழைந் துருகத் திருவிசைப் பாப் பாடினார். அடிகள் அவ்விடத்தில் சிலகாலம் வீற்றிருக்கையில் சேந்தனார் மனைவியாரும் மைந்தரும் அடிகள் முன்வந்து காலில்விழுந்து கதறியழுதார்கள்.

அப்போது அடிகள், நடந்த செய்திகளை விசாரித் தறிந்து, இரக்கமுற்று, "மத்தனை தயிருண்டானும்" என்னுஞ் செய்யுளைப் பாட மூத்தபிள்ளையார் சிவ பெருமான் ஆஞ்ஞைப்படி சேந்தனரைச் சிறையி னின்றும் நீக்கி அடிகள்முன் விட்டருளினர். அடிக ளும் அவர் பரிபாகம்நோக்கி, "ஐய, நீ உன் குடும்பத் தோடு காட்டுவிறகின் சிறுவிலைப் பொருள்கொண்டு சிவனடியார் ஒருவரை ஊட்டியுண்டு திருத்தில்லையம் பதியில் உறைதி," என்று கட்டளையிட்டருளிச் சீகாழி நோக்கிச் சென்றனர்.

சேந்தனர் திருவெண்காட்டடிகள் ஆணையின்படி நடந்துவரும் நாளில், ஏழுநாள் அடைமழை பற்றிப் பொழியப் பசியால் வருந்திக் காட்டுக்குப் போய் விறகு கொண்டுவந்து ஊரில் மாறிப் பெற்ற மாவைக் கொண்டு சென்று தம் மனைவியார் கையில் அளித்த னர். அவரும் களியமுது சமைத்துத் தம் கணவனர்க் குத் தெரிவித்தனர். சேந்தனர் சிவனடியாரைத் தேடி ஊர் முழுதுந் திரிந்தலைந்து கோயில் மண்டபந் தோறும் நாடினர். அன்பர்க்கிரங்கும் எம் ஐயர் இவர் பக்திக்கு மகிழ்ந்து மூப்பினல் தளர்ந்த அடியவ ரொருவர் உருக்கொண்டு மிகு பசியால் வாடினவர் போல் ஒரு மண்டபத்தில் தங்கியிருந்தார். அடியவர்க் காகத் தேடித் திரியுஞ் சேந்தனர், இந்தச் சிவப்பழத் தினை — புண்ணிய மூர்த்தியைக் கண்டு அவரைப் பணிந்து, தம் குடிலுக்கு அழைத்துச் சென்று அமுது செய்வித்தனர். அவரும் அதனை உண்டு சேடத்தை முன்றானையில் முடிந்துகொண்டுபோய்த் திருவம் பலம் புகுந்து அவ்விடத்தில் தரிசனத்துக்கு வந்த

அடியார்க்கும் தேவர்க்கும் அதன் சுவையை எடுத்துக் கூறி அப்பிரசாதத்தினை அவர்களுக்கும் சிவகாமவல்லிக்கும் அளித்து வீற்றிருந்தார்.

இவ்விடத்தில் இவ்வாறு நிகழ, செல்வச்சோழன், நாள்தோறும் கேட்பதுபோல் பூசைமுடிவில் மணியோசை கேளாமல் மனங்கலங்கி உணவின்றி, தரையிற் கிடந்து துயின்றான். அப்போது அம்பலத்தழகர், சேந்தனார் அன்பை வெளிப்படுத்த விரும்பி, அவன் கனவிற் சென்று "யாம் சேந்தனார் நிவேதித்த களியமுதை உண்ணப்போயிருந்தோம், ஆதலால் நீ செய்த பூசனைக்கு வரத் தடைப்பட்டது. வராமைக்காக வருந்தவேண்டாம்," என்று சொல்லி மறைந்தருளினார்.

உடனே அரசன் விழித்தெழுந்து, ஸ்நானாதிகள் செய்து, அப்படிப்பட்ட பேரன்புடையாரைத் தரிசிப்பதே பெரும்பேறு என்று சொல்லித் திருக்கோயிலுக்கு வந்தான். தில்லைவாழ் அந்தணரும் அடியார்களும் தானும் திருச் சிற்றம்பலத்துத் திருமுற்ற முழுதும் மணம்வீசிக்கொண்டு உதிர்ந்து கிடக்கும் களியமுதைக் கண்டு, சேந்தனாரைப் புகழ்ந்து, அவரைக் காண விரும்பினர்.

அப்போது மார்கழித் திருவாதிரை யுற்சவம் நடந்துகொண்டிருந்தது. முன்நாள் மழையால் தேர் விழா நடைபெறவில்லை. அவ்விழாவை அன்றைய தினம் ஆரம்பித்தனர். ஆனால் தேர் நடக்கவில்லை. அதைக் கண்டு யாவரும் வருந்தினர். அப்போது அடியார் இடுக்கண் தரியாதவராகிய பரமசிவம், "சேந்த, தேர் நடக்க எம்மைப் பல்லாண்டு பாடுக,"

என்று ஆகாயவாணியாற் கூறினார். சேந்தனார், "என்னை ஒரு பொருளாகத் திருவுளத்திற்கொண் டாய், யான் என்ன கைம்மாறு செய்வேன்!" என் றுருகிப் பல்லாண்டு பாடினர். தேரும் நடந்து வீதி வலம் வந்து நிலைசேர்ந்தது. பின்னர்ச் சேந்தனார் திருவிசைப்பாப் பாடிக் குருவருளால் தம் குடும்பத் தோடு எம்பெருமான் திருவடி நீழலை யடைந்தார்.

---

## உரு. அம்மை அமுதளித்தல்

சீகாழி சென்ற பிள்ளையார் தோணியப்பரை வணங்கி, அன்பு பெருக நின்று திருக்கழுமல மும் மணிக்கோவை என்னும் பிரபந்தத்தினைப் பாடி அங் குச் சிலகாலந் தங்கியிருந்தனர். அங்கு வதிந்திருக் கையில் திருச் சிற்றம்பலமுடையாரைக் காணவேண் டும் என்னும் அவா உண்டாயிற்று. உண்டாகவும் தோணியப்பரைத் தரிசித்து அவரிடம் விடைபெற் றுக்கொண்டு, அங்கு நின்றும் சிதம்பரத்திற்கு எழுந் தருளி, நடராஜப் பெருமானைத் தரிசித்து, "கோயில் நான்மணிமாலை" என்னும் பிரபந்தத்தினைப் பாடி ஆனந்தவெள்ளத்துள் ஆழ்ந்திருந்தனர். பின்பு பசி நோய் உண்டாகவும் "பன்னுக வாடகப் பொற் பாதம்" என்னுஞ் செய்யுளைச் சொல்ல, சிவகாம வல்லியார் உச்சி நிவேதனப் பிரசாதத்தினைக் கொண்டு வந்து கொடுக்க உண்டு பசியாறிப் பின் வந்தவர் அம்மையார் என்றுணர்ந்து அவரைத் துதித்துச் சிவயோகத்தில் அமர்ந்திருந்தார்.

அடிகள் சிதம்பரத்தில் எம்பெருமானைக் காலந் தவறாது தரிசித்துவருகையில், " திருவொற்றியூர்க்கு

வருக" என்று மருதப்பிரான் பணித்தது ஞாபகம் வர, அப்பொழுதே சபாநாயகரிடம் விடைகொண்டு புறம்போந்து, பல தலங்களைத் தரிசித்துக் காஞ்சிபுரம் அடைந்து, திரு ஏகம்பமுடையார் திருவந்தாதி, திரு ஏகம்பமாலை, கச்சித் திருவகவல் முதலிய பாடல்களைச் செய்து கச்சிக்காரோணத்தில் வீற்றிருந்தார். அங்கு ஒருநாள் பசிநோய் வருத்த "அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்கும்" என்னுஞ் செய்யுளைப் பாட, அம்மையார் ஒரு பிராமணப் பெண்ணுருவாய் வந்து அமுதளித்து அவர் பசியை யாற்றினர்.

---

## உசு. முத்தியடைதல்

பிறகு, அடிகள் புறப்பட்டு இடையிலுள்ள பல தலங்களையும் வணங்கித் திருக்காளத்தியை யடைந்து, அங்குப் பல பாடல்களை அருளிச்செய்து விடைபெற்றுத் திருவொற்றியூரை நாடிச் சென்றார். நாடிச் சென்றவர் அவ்வூர் எல்லையைக் குறுகியதும்,

"ஓடுவிழுந்து சீப்பாயும் ஒன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமெருந்தை யான்அறிந்து கொண்டேன் - கடுஅருந்தும்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவிற்
போவார் அடியிற் பொடி."

என்னுஞ் செய்யுளைப் பாடிப் பிறகு சந்நிதியடைந்து கண்ணீர் பெருகத் திருவொற்றியூர்த்தோகை பாடித் துதித்துப் பிரியாவிடைகொண்டு புறம்போந்து அவ்வூரிலேயே தங்கியிருந்தார்.

அங்கு இருந்துவரு நாட்களில் பசுமேய்க்குஞ் சிறுவரோடுகூடி ஆடியும் பாடியும் பற்பல அற்புதங்

களைச் சிறுவர் களிக்கச்செய்து முதல்வன் முறையீடு, அருட்புலம்பல் முதலியவற்றை அருளிச்செய்தார்.

பின்பு, முத்தியடையும் அவசரம் அடுத்தபடியால், அவர் அச் சிறுவர்களை நோக்கி, "சிறுவர்களே! உங்களுக்குச் சில விநோதங்களைக் காட்டுவேன், என்னை ஒரு குழியிற் புதையுங்கள்" என்றனர். அவர்கள் அவ்வாறே செய்தனர். செய்யவும் அவர்களுக்கு ஆச்சரியத்தினை உண்டுபண்ண வெளிப்பட்டு மற்றொரு மணற்குன்றின்மேல் நின்றனர். அது கண்டு அவர்கள் மகிழ்ந்து மீட்டும் மீட்டும் புதைக்க வெளிப்பட்டு நின்று பராக்குக்காட்டி, அப்பால், ஒரு முறை புதைக்க வெளிப்படாமல்.

சிவலிங்க வடிவமாக முளைத்து நின்றார். சிறுவர்கள் வியப்பும் அச்சமும் அடைந்து, நடந்தவற்றை ஊரில் உள்ளவர்களுக்கு அறிவிக்க, அவர்களெல்லோரும் திரண்டுவந்து, அவ் வற்புதத்தினைத் தரிசித்து ஆனந்தித்தனர். நாம் எல்லோரும் கண்டு களிக்க அவ்விடத்தில் ஆலயம் ஒன்றுளது. அதனை நாம் இன்றும் காணலாம்.



"ஒட்டுடன் பற்றின்றி உலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்திரகிரி பண்புணர்வ தெந்நாளோ!"

(தாயுமானவர்)

## திருவெண்காடர் சரித்திரம் உரைக்கும் நூல்கள்

1. பட்டினத்துப் பிள்ளையார் புராணம்
2. பட்டினத்துப் பிள்ளையார் — (88 செய்யுள்) புலவர் புராணம் — முருகதாசர் இயற்றியது. 1905.
3. திருவெண்காட்டடிகள் சரித்திரம்—தொழுவூர்—வேலாயுத முதலியார் எழுதியது—1886.
4. தமிழ்ப் பெருமக்கள் வரலாறு — S. அனவரத விநாயகம் பிள்ளை எழுதியது—1921.

---

## அடிகள் இயற்றிய நூல்கள்

1. கோயில் நான்மணி மாலை
2. திருக்கழுமல மும்மணிக்கோவை
3. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
4. திரு ஏகம்ப முடையார் திரு அந்தாதி
5. திருவொற்றியூர் ஒருபாவொருபது.



Printed at the Caxton Press, Madras -- 1926 (B).

58